# கண்ணீரும் புன்னகையும்

(PART OF THE TEARS AND LAUGHTER)

தமிழில் :

ஆ. மா. சகதீசன்



சூரியன்

சூரியன் பதிப்பகம்
39/19, கிராமத் தெரு,
திருவொற்றியூர்,
சென்னை-600 019

# பிரகடனம்

□ "என்னை தன்னந்தனியாக ஒரு தீவுக்கு அனுப்பி ... உன் கையில் பத்து நூல்களை மட்டுமே எடுத்துச் செல்ல வேண்டுமென்று யாராவது கட்டளையிட்டால் நான் கலீல் கிப்ரானின் நூல்களை மட்டுமே எடுத்துச் செல்வேன்"

*... 'ஞானபீடம்' பரிசுபெற்ற*

*எழுத்தாளர் வி. ஸ. காண்டேகர்*

□□ "ஸ்ரீகூருக்குப்பின் கிழை நாட்டு தத்துவ ஆசிரியர்களில் கலீல் கிப்ரானின் நூல்களே ஞானத்தை மிக மிக அழகாக தெரிலிக்கிறது. பல ஆண்டுகளாக கலீல் கிப்ரானின் நூல்களைப் போன்ற பிற நூல்களை நான் பார்த்ததே இல்லை.

*...மேனாட்டு இலக்கிய*

*விமர்சகர் ஜார்ஜ்ரஸ்ஸல்*

கலீல் கிப்ரானின் அனைத்து நூல்களையும்
சூரியன் வழங்குகிறது.

- கலீல் கிப்ரானின் கவிதைகள் (பி.வி. ரவி) 9 50
- கலீல் கிப்ரானின் கண்ணீரும் புன்னகையும் [ஆ. மா. சகதீசன்) 12 50
- கலீல் கிப்ரானின் ஞான தரிசனம் (ஆ. மா. சகதீசன்) 12 50

பிற நூல்கள்

- அழகின் பரதம் (த. பி. செல்லம்) 6 75
- இன்னும் கொஞ்சம் தூரம் (இரா. ஆனந்தி) 12 00
- ஒரு ரோஜாப்பூவும் இரண்டு உதடுகளும் (அனிதா) 7 50
- கை மாறும் கணையாழிகள் (அனிதா) 8 50
- சூரிய மழை (அனிதா) 8 00

# கண்ணீரும் புன்னகையும்

என் வாழ்க்கைப் புயலிலே சுவாசிக்கும்
முதல் முச்சான இந்தக் காவியத்தை— தென்றலைக்
காதலித்து, புயலுடன் வழிநடக்கும்
அந்தக் கம்பீரமான, உயர்ந்த ஆத்மாவிற்குக்
காணிக்கை யாக்குகின்றேன்.

மேரி. இ. அஸ்கிலுக்கு
**கலீல் கிப்ரான்**

---

குறிப்பு: **'மேரி இ. அஸ்கில்'** அமெரிக்காவில் வாழ்ந்த லெபனான் நாட்டுப் பெண்மணி. 1904-ல் கலீல் கிப்ரானுக்கு பணஉதவி செய்து தனி மனித ஓவியக் கண்காட்சியை, அமெரிக்காவின் பெருநகர்களில் அமைத்தார். கலீல் கிப்ரான் பாரீஸ் நகர் சென்று ஓவியக்கலை பயில இரண்டு ஆண்டுகள் பண உதவி அளித்தார்.

# கலீல் கீப்ரானின் காலடிச் சுவடுகளில் ஒரு ரோஜாப்பதியனை நட்டு வைப்போம்

கவிஞர் அனிதா

□

லெபனான் என்றாலே குண்டுவீச்சு பெய்ரூட்—அராபத். இப்படித்தான் நாம் செய்தித்தாள்களில் சொற்களை அறிகிறோம். கால வெள்ளத்தால் அழிக்க முடியாத மாபெரும் தீர்க்கதரிசி கலீல் கிப்ரானைத் தந்தது இந்த லெபனான் தேசம்தான். மார்கழிமாதத்துக்குளிர் இரவுகளில் ஆண்டாளின் பாசுரங்களை பாடிச் செல்லும் பக்தர்கள் நம்மிடையே நிறைய உண்டு. அந்தப் பாசுரங்களின் உருவகத்தில் உவமை கூறி வேதாந்தக் கருத்துக்களுக்கு விலாசம் எழுதுபவர்களும் நம்மிடையே நிறைய உண்டு. ஆனால் பாட்டுப் பகலவன் பாரதி சொற்படி

''சென்றிடுவிர் எட்டுத் திக்கும்
கொண்டு வந்திங்கு சேர்ப்பீர்
கலைச் செல்வங்கள் யாவும்''

—என்கிற கட்டளைக் கிணங்க கலீல் கிப்ரானின் கருத்துக்களை தமிழாய் தருகிறார் ஆ. மா. சகதீசன்

□

ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் ஓய்வின்றி கடலில் முத்துக்குளிப்பவன், தான் சேர்த்த முத்துக்களை, அலங்காரமாய் வர்ணத்தேரில் ஏற்றி வானில் பறந்து வந்து—

மக்களிடம் தூவிவிட்டுப் போகிற மாதிரி .. கலீல் கிப்ரான் என்கிற கடலில் மூழ்கி முத்தெடுத்து தமிழ்ச் சமுதாய வீதியில் விதைக்க வருகிறார் ஆ. மா. சகதீசன்... வாழ்த்து மாலைகளைச் தமிழ்த்தாய் இந்தப் பாட்டுப் பறவைக்கு அணிவிக்கும் போது, கூடிநின்று குதூகலத்துடன் ஆரத்தி யெடுத்து வரவேற்பதற்காக—தமிழ் வாசகர்களின் சார்பில் நானும் நிற்கிறேன். வாயில் தோரணங்களால் வார்த்தைச் சந்தங்களை, வீசி விட்டுப் போவதைவிட, நெஞ்சின் ஈரச் சதையால் இதமாக இந்த கானக் குயிலை வருடி விட்டுப் போவோம். வாழ்வின் பாலைச் சோகத்தை, ஒரு ஏட்டுக் கவியால் தீர்க்க முடியும், என்கிற கம்பீரமான பிரகடனத்தை, முன் நின்று நடத்த, மொழி ஒரு இடையூறல்ல என்பதற்கு இந்த நூல் மிகச் சிறந்த சான்றாகும். இதனை உணர்ந்து கொள்ள... நண்பர்களே ! வாருங்கள் நாம் கலீல் கிப்ரானின் காலடித் தடத்தில் கொஞ்சம் நடந்து பார்ப்போம்.



மனிதனின் இதயத்தில் புதைந்து போயிருக்கிற இரகசியங்களை இக்கவிஞனை விட வேறு யாரும் அழகாய் சொல்லியதில்லை. வாழ்க்கை என்பதற்கு யார் யாரோ சொன்ன கண்ணாமூச்சி கருத்துக்களை ஒதுக்கி விட்டு, இவர் சொல்கிறார்—

''வாழ்க்கை என்பது தன்னிலிருந்தே தோன்றுவதே தவிர சுற்றியுள்ளதிலிருந்து நம்மைவந்தடைவதல்ல'' —

ஆம் ... வாழ்க்கை தன்னிலிருந்தே தோன்றுவது. அது மனிதனின் எண்ணத்தின் ஒருங்கிணைப்பாய் அமைவது. இதனை மற்றவர்கள் சொல்வதற்கும் கிப்ரானின் இதயம் சொல்வதற்கும் உள்ள வேறுபாட்டை அறிந்து கொள்ள உதவும் இந்தக் 'கண்ணீரும் புன்னகையும்'

□

கவிஞன் என்பவன் கால ஓட்டத்தில் அழிந்து போகாத மாபெரும் ஞானி. உயிருடன் இருக்கும் போது தூற்று தலைக் கேட்டு வாழ்கிற இவன் மறைந்த பின்— இவனது கல்லறை கூட போற்று நலுக்குள்ளாகும். உயிரோடு இருக்கும் போது கிப்ரான் பட்ட துயர்கள் இப்போதைய லெபனான் பெய்ரூட் தெருக்களின் துப்பாக்கி ஓசையை விடவும் அதிகம். ஆனால் இன்று உலகின் பல மொழிகளி லும், இவனது வார்த்தைகள் வேதமாகிப் போனது. சில கவிஞர்களின், சுட்டும் விழிச் சுடர்கள் தம் புருவங்களை உயர்த்தி இவனை வெகு ஆழமாகப் பார்க்கத் தொடங்கிய பின்பு, தமிழும் செழுமை பெறத் தொடங்கி உள்ளது. சிந்திக்கத் தெரிந்தவர்கள் சிலராகத்தான் இருக்க முடியும். நீண்ட நதிக்கு அங்கங்கே தான் அருவிகள் இருக்க முடியும். அங்கிகள் தரித்த யாருமே யேசுபெருமானோடு பேச முடி யாது. நம்முடைய கலீல் கிப்ரான் லெபனானின் தீர்கக தரிசி மட்டுமல்ல. நமது நதிகளிலும் சலசலக்கும் கவிதைச் சங்கீதம், ஞானவான்களின் மோனத் தவத்திலும் தவிர்க்க முடியாத கீழைநாட்டு தத்துவஞானி. காதலைப் பற்றி எப்படியெல்லாமோ பலரும் சிந்தித்த போது 19 வருடங்க ளாக மே செய்டா என்கிற பெண்ணை நேரில் பார்க்காம லேயே காதலித்த புதுமைப்பிறவி. இறுதி வரை அவளைப் பார்க்காமலேயே 'முறிந்த சிறகுகள்' நூலை முதன் முதலாக அவளுக்கு அனுப்பியவன். காதலைக் குறித்த இவனது வார்த்தை வசந்தங்கள் பௌர்ணமி நிலவின் முல்லைப் பூக்கள். பார்பராயங் என்கிற பெண்ணிடம் கிப்ரான் கேட்கி றார் :

'உனக்கு பிடித்த ஏழு வார்த்தைகளைக் கூறு'

உடனே அவள் :

கடவுள், வாழ்க்கை, பூமி, அழகு, காதல் இந்த

ஐந்தை மட்டுமே என்னால் கூற முடிகிறது என்று சொல்ல, கிப்ரான் தொடர்கிறார்; 'முக்கியமான இரண்டை விட்டு விட்டாயே'...

என்னவென்று ஆச்சரியமாய் அவள் பார்க்க கிப்ரான் சொல்கிறார் ...

'ஒன்று நீ

இன்னொன்று நான்'

சிந்தனையின் ஊற்று எல்லா மனிதர்களிடமும் நிரந்தரமாகத் தங்குவதில்லை. தங்கவைக்கும் ஆற்றலைப் பெறுகிற மனிதர்கள் நம்மிடையே வியப்புக்கு ஆளாகிறார்கள். ஆணையும், பெண்ணையும் விட்டுவிட்டு-பூமியை, அதன் அழகை, கடவுளை, பின்னர் காதலை அடைய

'பெண்ணே !

நானும் நீயும் இல்லாதபோது

எதுவுமே இல்லையல்லவா' — என்பதை

அழுத்தமாக கூறவருகிறார் கிப்ரான்.

□

என் அன்பின் அன்பே!

நீ எங்கே இருக்கிறாய்?

அந்தச் சிறிய சொர்க்கத்தில்

மலர்ச் செடிகளுக்கு நீர் ஊற்றிக்

கொண்டிருக்கிறாயா?

சின்னக் குழந்தை ஆர்வமாக

தன் தாயின் மார்பகங்களைப்

பார்க்கிற பாதிரி ...

அந்த மலர்கள், மலர்ந்து

உன்னை உற்று

நோக்குகின்றனவா? ......

இந்த வரிகளின் உன்னதம் மனசை நெகிழ வைக்குமே ... தூய அன்பினை இதுதானே வெளிப்படுத்துகிறது.

உன் அழகைப் பிரதிபலித்த

என் கண்களை

அழுகை, உலர்த்தி மங்கவைத்துவிட்டது.

உன் முத்த மழையால் நனைத்து

இன்பத்தின் இருப்பிடமாக்கிய

என் உதடுகள் உலர்ந்து விட்டன!

என் அன்பின் அன்பே!

நீ எங்கிருக்கிறாய்?

கடல் கடந்து நான் கூவி அழும்

என்குரலை உன்னால்

கேட்க முடிகிறதா?

எங்கே உன் புன்னகையை

இந்த வான வெளியில் மிதக்கவிடு

அது என்னை அடைந்து

என் உயிரை வாழ வைக்கும்

சோகமான காதலை இங்கே பூச்செடிகளும், புல்புல் பறவைகளும், மிக நீண்ட யூகலிப்டஸ் மரங்களும் கேட்கிற அளவிற்கு கூவி அழும் கலீல் கிப்ரானை நாம் நேசித்தே ஆக வேண்டும். தாயின் மடியில் குழந்தையின் சோகம் மறையும். காதலியின் மடியில் தானே காதலனின் சோகம் குறையும். ஆனால் முடிவு பெறாத சோகத்தை வாழ்வின் எதார்த்தமாக நம்மையெல்லாம் பார்க்க வைக்கிற கிப்ரான் வெறும்

காதல் வசனம் பேசுகிற கந்தர்வபறவையல்ல. உள்ளும் புறமும் மனிதனின் வேதனையை அறிந்து சொன்ன உளவியல் விஞ்ஞானி. அவனுடைய எல்லா நூல்களிலும் தம் கண்களால் நடந்து நடந்து....

ஒரு காவியப் புரட்சியை தமிழில் செய்திருக்கிறார் மரியாதைக்குரிய ஆ. மா. சகதீசன்.

○

முன்னுரை என்கிற பெயரில் வெற்றுத்தாளில் வாடிய மலரிதழ்களை தூவுவதில் எனக்கு விருப்பமில்லை. என் கவிதை வாழ்க்கையின் ஆரம்ப நாட்களிலேயே சின்ன விளக்கால் என் பாதைக்கு ஒளி காட்டியவன் கிப்ரான். ஆகவே தான் — அந்த கிப்ரானின் ஞான தரிசனத்திற்கு காத்துக் கிடக்கும் பல்லாயிரம் தமிழ் இளைஞர்களில் நானும் ஒருவானாக மாறினேன். எனக்கு முன்பே ஆண்டுக் கணக்கில் என் முன்னோடிகள் சிலர் கிப்ரானை தமிழில் தந்திருக்கின்றனர். ஆயினும் இந்தக் "கண்ணீரும் புன்னகையும்" தமிழுக்குப் புதிது.

○

வேற்று மொழியின் மொழிபெயர்ப்பு என்பதால் இதனை ஒதுக்சி விடக் கூடாது. அழகான குழந்தை வேண்டுமென்பதற்காக காஷ்மீரத்து குங்குமப் பூவை உபயோகிப்பதைக் கூட ஒதுக்க முடியாதவர்கள் நாம். ஆகவே இந்த நூலின் கருத்துக்கள் தமிழுக்கு புதிய வடிவம் தர வேண்டும். கிப்ரானை ஆங்கிலம் வாயிலாக குளிர் சாதன அறைக்கு சொந்தக்காரர்கள் மட்டுமே அறிய முடியும் என்கிற நிலையை மாற்றி தமிழில் தர முடியும் என்பதைச் சாதித்துக் காட்டிய ஆ. மா. சகதீசன் வாழ்த்துக் குரியவர் வணக்கத்திற் குரியவர். தமிழின் உயர்வுக்கு தம்

இதயத்தையே மேடையாக்கி தருகிற இவர் போன்றவர்களால் தான் மொழி உயர்வடையும். மனித எண்ணம், வாழ்க்கை இவைகள் மேன்மையுறும்.

வாருங்கள்! நண்பர்களே! இந்நூலாசிரியரின் இதயச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் கிப்ரானின் பாதச் சுவடுகளில் ஒரு ரோஜாப் பதியனை நட்டு வைப்போம்.

கவிஞர் அஃணிதா

சூரியன் பதிப்பகம்
39/19 - கிராமத்தெரு
திருவொற்றியூர் - சென்னை-600019



# 1. முன்மொழி



என் உள்ளத்தே எக்களிக்கும் சிரிப்பைச் சீமான்களின் செல்லாக்காசிற்கு மாற்றிக் கொள்ள மாட்டேன். வருந்திய என் சிந்தனையால் அழைக்கப்பட்ட கண்ணீரை அமைதி மயமாக்கிக்கொண்டு திருப்தி அடைந்து விடவும் மாட்டேன்: என்பாருலக வாழ்வெல்லாம் 'கண்ணீரும் புன்னகையுமாக இயங்க வேண்டுமென்பதே என் பேரவா!

என் இதயத்தைப் புனிதமாக்கி, வாழ்வின் இரகசியங்களை வெளிப்படுத்தி, அதன் பெருந்தன்மையை உணர்த்தும் கண்ணீரே! உள்ளம் உடைந்தோருடன் ஒட்ட வைக்கும் கண்ணீரே!

உடன் வாழும் மக்களை நெருங்கி அழைத்து அணைக்க வைக்கும் சிரிப்பே! வாழ்க்கையின் வளமையிலே பொங்கி வரும் இன்பத்தின் விளக்கமான சிரிப்பே!

தோல்வியும் ஏமாற்றமமுடைய வாழ்வை விட, இன்பத்திலே இறந்து படுவதை ஆயிரம் மடங்கு அன்புடன் வரவேற்பேன். அழகிற்கும் அன்பிற்கும் துடிக்கும் அழியாத பசியே என் பெரு விருப்பம். பணமும் பட்டமும் பெற்றவன் அமைதியற்றவனென்பதை நான் நன்கு அறிவேன். ஆனால் அன்புக் காதலரின் அழுகைக் கண்ணீர், குயிலின் கீதத்தை விட அதிகமாக அமைதி அளிக்கின்றது எனக்கு!

இரவின் வருகையிலே மலர்கள் இதழ் குவித்து காதலிலே கண்ணயர்கின்றன. காலைக்கதிரவனின் செங்கதிர்களிலே, மலர்கள் தம் பொன்னிதழ் விரித்து, ஆதவனின் அன்பு

முத்தம் பெற்றுச் சிரிக்கின்றன. மலரின் வாழ்க்கை, விருப்பம், திருப்தி, அமைதி, அனைத்தும் உடையனவாம் ''கண்ணீரும் புன்னகையும்''

தண்ணீர் மறைந்து ஆவியாகி, வானத்தில் சென்று, கருமுகிலாகி, மலையையும் சிகரத்தையும் சிங்காரிக்கின்றது.

தென்றல் தவழ்ந்து வீச, மழை மண்மேல் வீழ்ந்து, அருவியோடு அசைந்தாடி, வழி நெடுக கிதம் பாடி, கடலிலே கலந்து விடுகின்றது. முகிலின் வாழ்க்கை, அன்பும் பிரிவும் அமைதிச் சேர்க்கையுமே! ''கண்ணீரும் புன்னகையும்''

இவ்வாறு உயிர் உடலை விட்டுப் பிரிந்து, பொருளுள்ள உலகிலே நடந்து, துக்கச் சமவெளியிலே வீசி, மலையிலே வலம் வரும் மேகமாகி, இறப்பெனும் காற்றில் கலக்க, அன்பும் அழகுமாய், கரையற்ற கடலாகிய இயற்கையையே வந்தடைகின்றது.

''கண்ணீரும் புன்னகையும்''



# 2. தோற்றம்

## CREATION

இயற்கையான இறைவன் தன்னிலிருநது ஒர் உயிரைப் பிரித்து, அதை அழகுப் பெண்மயமாக்கினார்; அதன் மேல் அன்பு, கவர்ச்சி என்னும் பண்புகளைப் பொழிந்தார். அவளிடம் இன்பக் கோப்பையைக் கொடுத்து, நீ கடந்த காலத்தையும், வருங்காலத்தையும் மறந்தாலன்றி இந்தக் கோப்பையிலுள்ளதை அருந்தாதே! ஏனென்றால் 'இன்பம் கண நேரமே வாழ்வது' என்றார்.

அவர் அவளிடம் ஒரு துன்பக் கிண்ணமும் தந்து ''இக் கிண்ணத்திலுள்ளதைக் குடித்தால், நீ வாழ்வின் இன்பம் வினாடியில் விரைந்தோடுவதையும், துன்பம் எப்போதும் சுழன்று வருவதின் பொருளையும் உணர்வாய்,'' என்றார்.

அவளுக்கு, உலகத்தில் திருப்தி அடைந்தோம் என்று விடும் முதல் மூசசிலேயே, அவளைப் புறக்கணித்துப் பறந்து செல்லும் காதலையும், தன் புகழ்ச்சியை உணரும் போதே மறைந்து விடும் தேனின் இனிமையையும் அளித்தார்.

பின்பு அவளுக்கு நேர்மையான பாதையிலே செல்ல அறிவை அளித்து, அவளின் உள்ளத்தின் ஆழத்திலே, தெரியாததையும் காணும் கண்ணையும் வைத்து, அனைத்து உயிர்களிடமும் அன்பு, நல்லதன்மை, காட்டும் குணத்தையும் கொடுத்தார். வானுலக அணங்குகள், வான வில்லால் நெய்த, நம்பிக்கையெனும் அழகு ஆடையை உடுத்தார். வாழ்வின் உதயமும் வெளிச்சமுமான குழப்பத்தின் நிழலைப் போர்வையாய் போர்த்தினார்.

பிறகு கோபத் தழலிலே கொதிக்கும் செந்தீயையும், அறியாமைப் பாலையிலே பாய்ந்து வீசும் காற்றையும், தன்னலம் எனும் கடற்கரையிலே காணும் கூறான அறுக்கும் மணலையும், காலத்தின் காலடியிலே கிடக்கும் கருமையான மண்ணையும் எடுத்து ஓர் ஆண் உருவமாகச் செய்தார்.

ஆசையும் விருப்பமும் பூர்த்தியாகும் அந்தக் கண நேரத்திலேயே, தணிந்து மறைந்து விடும் கண்மூடித்தன மான ஒரு பைத்தியக்கார சக்தியையும் அளித்து, மரணத்தின் வாளான உயிரையும் அம் மனிதனுள்ளே புகுத்தினார்.

தன் படைப்பை முடித்து விட்ட இறைவன், உரக்கச் சிரித்துக் கொக்கரித்தார். பிறகோ அம் மனிதனைப் பரிதாப மாகப் பார்த்து, ஓங்கி வளரும் தன் அன்பு நிழலிலே வழிகாட்ட வைத்துக் கொண்டார்.



# 3. இரு குழவிகள்

## TWO INFANTS

அரண்மனையின் நிலா முற்றத்திலே நின்றுகொண்டு, கடல் அலையென கவிந்துள்ள மக்கள் கூட்டத்திற்குக் கூறினான் அரசன்; ''நீங்களனைவரும் பெருமையால் பூரிக்கும்படி என் குல விளக்காய் பிறந்துள்ள அரசிளங் குமாரனை எண்ணி உங்களுக்கும், என் வளங்கொழிக்கும் நாட்டிற்கு அன்பான வாழ்த்துக்களை வழங்குகின்றேன். அவன் என் குலக்கொடியைத் தழைக்கவைக்கும் புது மலர்; அவனைப் பொருத்தே என் சாம்ராஜ்யத்தின் (பேரரசின்) வருங்காலம் வாழவிருக்கின்றது; இவ்வேளையில் நீங்கள் ஆடிப்பாடி ஆனந்தமடையுங்கள் என்றான்.

அடக்கப்பட்டோரின் ஆனந்தமும், வந்தனையும் நிறைந்த குரல் வான வெளியெல்லாம் பாட்டின் வெள்ளமாய் பரந் தோடியது. ஆம்! புதிய கொடுங்கோலனை, பலமிழந்த மக்களைத் தன் கடுமையான அதிகார வண்டியிலே பூட்டி, அடக்குமுறைச் சாட்டையால் வாட்டவிருக்கும் அந்த அரசிளங்குமரனை, அன்பு மொழி கூறி வரவேற்றனர்! அவர் களின் உடலைக் கவர்ந்து, உடலையும் உயிரையும் உணர் வையும் கொலை செய்யப் போகும் அரசிளங்குமரன் பிறந்ததற்காக, கும்மாளமிட்டு, குடித்து, குதித்து கூத்தாடினர்! ..

அந்தப் பேரரசிலே, அதே நேரத்தில் இன்னொரு குழந்தையும் பிறந்தது, இங்கே மக்களின் கூட்டம் வலி

பிறகு கோபத் தழலிலே கொதிக்கும் செந்தீயையும், அறியாமைப் பாலையிலே பாய்ந்து வீசும் காற்றையும், தன்னலம் எனும் கடற்கரையிலே காணும் கூறான அறுக்கும் மணலையும், காலத்தின் காலடியிலே கிடக்கும் கருமையான மண்ணையும் எடுத்து ஓர் ஆண் உருவமாகச் செய்தார்.

ஆசையும் விருப்பமும் பூர்த்தியாகும் அந்தக் கண நேரத்திலேயே, தணிந்து மறைந்து விடும் கண்மூடித்தனமான ஒரு பைத்தியக்கார சக்தியையும் அளித்து, மரணத்தின் வாளான உயிரையும் அம் மனிதனுள்ளே புகுத்தினார்.

தன் படைப்பை முடித்து விட்ட இறைவன், உரக்கச் சிரித்துக் கொக்கரித்தார். பிறகோ அம் மனிதனைப் பரிதாபமாகப் பார்த்து, ஓங்கி வளரும் தன் அன்பு நிழலிலே வழிகாட்ட வைத்துக் கொண்டார்.



# 3. இரு குழவிகள்

## TWO INFANTS

அரண்மனையின் நிலா முற்றத்திலே நின்றுகொண்டு, கடல் அலையென கவிந்துள்ள மக்கள் கூட்டத்திற்குக் கூறினான் அரசன்; ''நீங்களனைவரும் பெருமையால் பூரிக்கும்படி என் குல விளக்காய் பிறந்துள்ள அரசிளங் குமாரனை எண்ணி உங்களுக்கும், என் வளங்கொழிக்கும் நாட்டிற்கு அன்பான வாழ்த்துக்களை வழங்குகின்றேன். அவன் என் குலக்கொடியைத் தழைக்கவைக்கும் புது மலர்; அவனைப் பொருத்தே என் சாம்ராஜ்யத்தின் (பேரரசின்) வருங்காலம் வாழவிருக்கின்றது; இவ்வேளையில் நீங்கள் ஆடிப்பாடி ஆனந்தமடையுங்கள் என்றான்.

அடக்கப்பட்டோரின் ஆனந்தமும், வந்தனையும் நிறைந்த குரல் வான வெளியெல்லாம் பாட்டின் வெள்ளமாய் பரந்தோடியது. ஆம்! புதிய கொடுங்கோலனை, பலமிழந்த மக்களைத் தன் கடுமையான அதிகார வண்டியிலே பூட்டி, அடக்குமுறைச் சாட்டையால் வாட்டவிருக்கும் அந்த அரசிளங்குமரனை, அன்பு மொழி கூறி வரவேற்றனர்! அவர்களின் உடலைக் கவர்ந்து, உடலையும் உயிரையும் உணர்வையும் கொலை செய்யப் போகும் அரசிளங்குமரன் பிறந்ததற்காக, கும்மாளமிட்டு, குடித்து, குதித்து கூத்தாடினர்!

அந்தப் பேரரசிலே, அதே நேரத்தில் இன்னொரு குழந்தையும் பிறந்தது, இங்கே மக்களின் கூட்டம் வலி

யோரின் புகழ்பாடி, வன்மை மிக்க கொடுங்கோலனுக்கு வாழ்த்துக்கூறி, தங்களையே தாழ்த்திக் கொண்டிருக்கும் போது, வானத்து தேவதைகள் இம்மக்களின் மடமையை யும், வலிவற்ற தன்மையையும் எண்ணி எண்ணி அழுது கொண்டிருந்தனர். அந்த நேரத்திலே நோயுற்ற பெண் ஒருத்தி எண்ணமிடலானாள். பட்டுப்போன, நிராகரிக்கப் பட்ட பொந்துக் குடிசையிலே, பாயற்ற கடினத்தரைமேலே கந்தலான கோணிப் பையிலே மூடப்பட்ட இளங்குழந்தையை அணைத்துக் கொண்டு, இறப்புலகிற்கு எடுத்தேகும் பசி யுடன் பரிதவித்துக் கொண்டிருந்தாள்.

அவள் மக்களினத்தால் ஒதுக்கப்பட்ட, வருத்தம் வாட்டும், பரிதாபத்திற்குரிய இளம்பாவை. அவள் கணவன் அரசனின் அடக்குமுறை வலையிலே சிக்கி, வாழ்விழந்து, தன் துணைவியை இப்பாருலகிலே பரிதவிக்க விட்டு விட்டுச் செத்து மடிந்தான். அவள் துன்பச் சுழலிலே சிக்கிச் சிதை யாமல் உயிர் வாழ ஒரு சிறு துணைவன் பிறந்தான்.

அந்தப் பெருங் கூட்டம் பிரிந்து சென்று, அரண்மனை முன் அமைதி நிலவும் நேரத்திலே, இந்தத் துரதிஷ்ட மங்கை, தன் குழவியை மடிமேலமர்த்தி அதன் பால்வடியும் முகம் நோக்கி, அதைக் கண்ணீர் மழையால் நனைத்துக் கொண்டிருந்தாள். அவள் பசியால் பார்வை பஞ்சடைய, குரல் நடுங்கக் குழந்தையிடம் கூறினாள் :

"கண்ணே, அமைதியான அந்த உலகை விட்டு, கொடுமையும் துன்பமும் நிறைந்த இந்த உலகிலே வாழ, அதுவும் என் வயிற்றில் ஏன் பிறந்தாய் ? தேவதைகள் வாழும் வானுலகை விட்டு, வறுமை வாட்டும் மக்கள் கூட்டம் நிறைந்த, துன்பமும் துயரமும், அடக்குமுறையும் அவமானமும், கொந்தளிப்பும் குழப்பமும் நிறைந்த இந்த மண்ணுலகிற்கு ஏன் வந்தாய்? உனக்களிக்க என் கண்ணீர் அன்றி வேறென்ன இருக்கிறது? பால் பருகாமல் என்

கண்ணீரைக் குடித்து நீ உயிர் வாழ்ந்து விட முடியுமா? என்னிடம் பாங்கான பட்டில்லை உனக்கு உடுத்தி களிப் படைய! மகனே! குளிரால் நடுங்கும் என் கரங்கள் உனக்கு வெப்பமளிக்குமா? ஆடும் மாடும் பரந்த பச்சைப்புல் தரையிலே பாங்காக மேய்ந்து அமைதியாக பட்டியை நோக்கி பறந்து வருகின்றன. அதோ! அழகுப் பறவைகள் ஆனந்தமாகப் பழங்களை உண்டு, பொன்னூஞ்சலாடி கிளை நடுவே இன்பமாக உறங்குகின்றன. ஆனால் என் அருமைக் கண்மணியே! இந்த உலக மக்களால் வெறுக்கப்பட்ட-நிரா கரிக்கப்பட்ட எனக்கேன் மகனாய்ப்பிறந்தாய்?'' என்று விம்மி, ஏங்கி, தவித்து அழுதாள்.

பிறகு அக்குழந்தையின் பவழ வாயைத் தன் வற்றி யுலர்ந்த மார்புக்களித்து, இருகரங்களால் அன்போடு ஆரத் தழுவி, இறக்குமுன்பு ஒன்றாய் இருந்தபடி இணைந்து விடலாமென்று அணைத்துக் கொண்டாள்.

பின் தன் தவிக்கும் கையேந்தி, கொதிக்கும் கண்களால் வான் நோக்கிக் கூவினாள். ''இயற்கையே! இந்தத் துன்பம் வாய்ந்த பாமர மக்களிடம் கருணைகாட்டு!''

அந்தக் கணநேரத்திலே, சந்திரனை மறைத்து நின்ற கார்முகில் அகல, மதியின் ஒளி அப் பொத்தல் கூரை வழியே இறந்து பட்ட அவ்விரு முகங்களின் மேலும் விழ்ந்து தவழ்ந்தது.

○ ○ ○

# 4. நேற்றும் இன்றும்

## YESTERDAY AND TODAY

பெரும் பணக்காரன்—பொன்னை அடைகாப்போன்—மாளிகைப் பூங்காவிலே—வேதனைகள் உடன் நடக்க—அடிமேல் அடிவைத்து நடந்து கொண்டிருந்தான். அவன் தலைமேல் பிணத்தைச் சுற்றி வட்டமிடும் கழுகுபோல் தொந்தரவுகள் மொய்த்துக் கொண்டன. அவன் சலவைக் கல் சிலைகள் சூழ்ந்த அழகிய நீர் நிலையை அடைந்தான்.

காதலரின் கற்பனையிலிருந்து சுதந்திரமாய் துள்ளி யோடும் எண்ணங்கள் போல், சிலைகளின் வாயிலிருந்து வழிந்தோடும் தண்ணீரைப் பார்த்து நின்றான். கன்னிகை யின் கன்னத்தே இருக்கும் மரு-போன்று, குன்றின்மேல் நின்ற தன் மாளிகையை நினைத்து சிந்திக்கலானான்.

அவன் நினைவு, வாழ்க்கை நாடகத்தைக் கண்ணீர் வடிய படிக்க, அக்கண்ணீர் அவன் கண்களை மறைக்க, இயற்கைக்கு மனிதனின் கடுகு அனைய சேர்க்கையான மாளிகையைப் பார்ப்பதைத் தடுத்தது.

இயற்கையால் பின்னப்பட்ட, தன் இளமை வாழ்க்கைப் பிரதி பிம்பத்தை, வருத்தத்துடன் ஆழ்ந்து துருவிப்பார்க்க கொந்தளிக்கும் அழுகையை அடக்க முடிய வில்லை.

நேற்று நான் பசுமை சமவெளியிலே ஆடுகளை மேய்த் துக்கொண்டு, என் வாழ்க்கையிலே இன்பத்துடன் புல்லாங் குழலிசையை அனுபவித்துத் தலை நிமிர்ந்து வாழ்ந்தேன்.

ஆனால் இன்றோ, பேராசையின் கைதியாய் அடைபட்டுக் கிடக்கின்றேன். பொன், என்னை முதலில் பெண்ணிற்கும், பிறகு அமைதியின்மைக்கும், முடிவில் நசுக்கும் வேதனைக்கும் வழி நடத்திச் சென்றது.

நேற்று, நான் பாடும் பறவையாய், இங்கும் அங்கும் வயல் வெளியியே சுதந்திரமாய் பறந்து மகிழ்ந்தேன். இன்று நான் உருண்டோடிடும் செல்வத்திற்கும், சமூகத்தின் சட்டத்திற்கும், நகரத்தின் கட்டு திட்டங்களுக்கும், விலைக்கு வாங்கிய நண்பர்களுக்கும், அடிமையாய் விசித்திரமான குறுகிய சட்டங்களுக்கு, அடங்கி ஒடுங்கி நடந்து, மக்களை மகிழ்வித்துத் தாழ்கின்றேன். நான் சுதந்திரமாய் வாழ்க்கையின் இன்பத்தையெல்லாம் அனுபவிக்கப் பிறக்க, பொன் மூட்டையின் பளுவால் முதுகெலும்பு ஒடிய, பொதி சுமக்கும் மிருகமாய் துன்புற்று வாழ்கின்றேன்.

பரந்த சமவெளி, பாடும் அருவி, வீசும் தென்றல், அணைக்கும் இயற்கை, எல்லாம் எங்கே?

எங்கே? என் அன்புருவம் எங்கே?

நான் எல்லாவற்றையும் இழந்தேன்!

துக்கத்தைத் தூண்டும் தனிமை, எள்ளி நகைக்கும் பொற்காசு, மறைவிலே வசைபாடும் அடிமைகள், என் இன்பத்தின் சமாதியாய் நான் எழுப்பிய மாளிகை, அதன் உயர்ச்சியிலே உள்ளத்தை இழந்த நான், இவை தான் என் மீதப் பொருள்கள்;

நேற்று, நான் வளர்ந்த மலையிலும், பரந்த புல்வெளியிலும், என் ஆசைக் காதலியுடன் அலைந்து மகிழ்ந்தேன். நல்ல தன்மை என் நண்பனாகவும், காதல் என் இன்பமாயும், வெண்ணிலா என் பாதுகாப்பாளனாயும் இருந்தது.

இன்றோ, பொன்னிற்கும் வைரத்திற்கும் தங்கள் உடலை விற்கும், அழியும் அழகுடைய பெண்கள் புடைசூழ வருந்துகிறேன்.

நேற்று, நான் பொறுப்பற்று சுதந்திரமாய் ஆட்டிடையருடன் இன்பத்தைப் பகிர்ந்து உண்டு, உடுத்து, ஆடிப்பாடி, ஓடி உழைத்து, உள்ளத்தின் உண்மைப் பண்பாடி வாழ்ந்தேன்.

இன்றோ, சூழ்ந்த ஓனாய்களிடையே வாழ்கின்றேன். நான் பாதையிலே நடந்து செல்லும் போது என்னை வெறுப்புக்கண்களுடன் வெறித்து நோக்கி, பொறாமையும் அருவருப்பும் தோன்ற சுட்டிக் காட்டுகின்றனர். நான் பூங்கா வழியே மறைந்து நடந்தால், கோபம் கொதிக்கும் முகங்களெல்லாம் என்னையே நோக்குகின்றன.

நேற்று நான் இன்பச் செல்வத்திலே திளைத்தேன்; இன்று பொன் குவிந்த ஏழ்மையிலே உழல்கின்றேன்.

நேற்று திருப்தியுள்ள மக்களைக் கண்டு இன்பமடையும் கருணையுள்ள அரசனைப் போல், என் ஆட்டுக் கூட்டத்தை நோக்கி இன்பம் கொண்ட இடையனாய் இருந்தேன். இன்று என் செல்வத்தின் முன் அடிமையாய் நிற்கின்றேன், நான் அனுபவித்த எளிய வாழ்க்கையின் அழகையெல்லாம் அபகரித்துக் கொண்டது. இப்பொன், பொருள், போக்கியம் எல்லாம்.

நீதிபதியே! என்னை மன்னித்து விடு! இந்தச் செல்வம், என் வாழ்க்கையைச் சுக்குநூறாக்கிச் சிதைத்து, மூடத்தனமும், கொடுமையும் வாழும் குகைக்கு எடுத்தேகும் என்பதை அறியேன். பெருமை அழியாதது புகழ் மங்காதது என்று நான் எண்ணியதெல்லாம் முடிவற்ற நரகம் அன்றி வேறில்லை.

அவன் தன்னையே வெறுப்புடன் சுருட்டிக்கொண்டு பெருமூச்சுடன் மெல்ல மாளிகை நோக்கி நடந்தான்.

''இதுதான் மக்கள் மதிக்கும் செல்வமா? இது தான் நான் தொழுது வணங்கி தொண்டு செய்யும் இறைவனா? இதைத் தான் இப்புவிமேல் தேட வேண்டுவதா? இச் செல்வத்தை நான் ஏன் ஒரு துளி திருப்திக்கு மாற்றிக்கொள்ளக் கூடாது? யார் எனக்கு ஒரு சிங்காரச் சிந்தனையை ஒரு கோடி பொன்னுக்கு விற்பார்கள்? யார் எனக்குக் கணநேரக் காதலை கைநிறைந்த வைரத்திற்குக் கொடுப்பார்கள்? யார் எனக்கு மற்றோர் மனமறியும் கண்களைக் கொடுத்து என் பொக்கிஷத்தின் பொன்னை வாரிச் செல்வர்? ' என்று பல வாறாக மாறி மாறி, கூறி நடந்தான்; நகர்ந்தான்!

அவன் மாளிகையின் வாயிலை அடைந்தவுடன் ஜெருசெலத்தைத் திரும்பிப் பார்த்த ஜெரிமய்யாபோல் அந்த நகரைப் பார்த்தான், அவன் கைகளைத் தூக்கி வேதனையால் தேம்பித் தேம்பி கூவி அழுதான்.

''கூச்சல் நிறைந்த நகர் வாழ் மக்களே! இருட்டிலே வாழ்ந்து, துயரத்தை நோக்கி விரைந்து, பொய்யைப் பிரசாரம் செய்து, புத்தியற்று பேசும் மக்களே! நீங்கள் எவ்வளவு காலம் அறியாமையில் உழல்வீர்கள்? எவ்வளவு நாள் வாழ்க்கைச் சகதியிலே புரண்டு, பூங்காவின் பூரிப்பு மிக்க வாழ்க்கையைப் புறக்கணிப்பீர்கள்? இயற்கையின் ஒளி வீசும் அழகிய பட்டாடைகள் உங்களுக்காக நெய்யப் பட்டிருக்கும் போது, குறுகிய கந்தலாடைகளை எவ்வளவு காலத்திற்கு உடுப்பீர்கள்? அறிவு ஒளி வீசும் அகல் விளக்கு அணையப் போகிறது! அதிலே எண்ணெய் ஊற்ற காலம் நெருங்கிவிட்டது. உண்மையான 'பொருள் மாளிகை' பாழாக்கப்படுகிறது! அதைப் பழுதுபார்த்து பாதுகாக்க நேரம் நெருங்கிவிட்டது! அறியாமைத் திருடர்கள், அமைதிச் சுரங்கத்தை கொள்ளை கொண்டுவிட்டனர். அதைத் திருப்பிக் கவர காலம் கனிந்து விட்டது!''

அந்த நேரத்திலே ஏழை யொருவன் கையேந்தி காசு வேண்டி நின்றான். அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்த வுடன், அவன் உதடுகள் கனிந்து விரிய, கண்கள் மென்மை யின் பூரிப்பால் ஒளி வீச, முகம் அன்பால் மலர்ந்தது. அவன் பொய்கைக்கரையிலே வருந்தி அழைத்த 'நேற்று' வாழ்த்து கூறி வந்தது போல் உணர்ந்தான். அந்த ஏழையை அன்பால் ஆரத்தழுவி, அவன் கைகளைப் பொன்னால் நிரப்பினான். பின்பு அன்பின் இன்பக் கனிவுடன் நம்பிக்கை தோய்ந்த குரலில் ''உன் உடன் வருந்தும் ஏழைகளுடன் நாளைக்கு இங்கு வா ! உங்கள் தேய்ந்த செல்வம் திருப்பித் தரப்படும் !'' என்றான்.

பின்பு ''எல்லாம் நன்மைக்கே !'' இந்த பொன்னும் ஒரு பாடம் கற்பிக்கிறது. பணம் ஓர் தந்தி பூட்டிய பாட்டுக் கருவி. அதை நேரான முறையிலே மீட்டத்தெரியாதவன் வேதனைப் பண்ணையே கேட்பான் ! பணம் காதல் போன்றது ! அதைச் சேர்த்துவைப்பவனை மெல்ல மெல்ல வாட்டிக் கொல்கிறது ! அதை உடன் வாழும் மக்களின் மேல் வாரி இரைப்பவனை இன்பத்தால் வாழ்விக்கின்றது,'' என்று கூறிக்கொண்டே மாளிகையுள் புகுந்தான்.

நாளை ..... ? !

□ □ □

# 5. அழகின் அரியாசனத்தின் முன்

## BEFORE THE THRONE OF BEAUTY

ஒரு நாள், சமூகத்தின் கடும் பார்வையினின்று தப்பி, நகரின் கூச்சல் காட்டினின்று விடுதலை பெற்று, பரந்த சமவெளி பக்கம், என் ஓய்ந்த கால்கள் நடக்கப் பின் தொடர்ந்தேன்.

உருண்டோடும் அருவி வழியே நடந்து, பண்பாடும் பறவைகளைப் பின்தொடர்ந்து, கதிரவனின் ஒளி, மண்மேல் விழாமல் தடுத்து நின்ற, பரந்த கிளைகள் நிறைந்த, மரத்தடியிலே, தனிமையான இடத்தை அடைந்தேன்.

நான் அங்கு நின்று நாற்புறமும் நோக்க, இன்பத்தை காணாமல் தவித்து, வாழ்வின் கானல் நீரைக் கண்டதாக உயிருக்கு உணர்வளிப்பதாக இருந்தது.

நான் சிந்தனையில் ஆழமூழ்கினேன்; என் உள்ளுணர்வு வான வெளியிலே மிதக்கலாயிற்று. ஒரு தெய்வ அணங்கு திராட்சைக் கொடியின் இலைகளால் தன் உடலின் ஒரு பகுதியை மூடிக்கொண்டு கரிய கூந்தலிலே, மல்லிகை மலர்ச்சரம் சூடி, திடீரென்று என் முன்னே தோன்றினாள். என் திகைப்பை உணர்ந்த அவள், ''பயப்படாதே, நான் இந்த வனப் பெண்'' என்றாள்.

''உன் போன்ற பேரழகு எப்படி இவ்விடத்தே வாழ வேண்டி நேரிட்டது? யார் நீ? எங்கிருந்து வந்தாய் சொல்!'' என்றேன் நான்.

அவள் பச்சைப் பசும் புல்தரைமேல் மெல்லென அமர்ந்து, ''நான் இயற்கையின் தோற்றம்! நான் உன்

மூதாதையர்கள் வணங்கி வழிபட்ட, அழியாத கன்னிப்பெண் என் பெருமைக்காக பால்பெக் நகரிலும், டிஜாபியில் நகரிலும் கோயில்களும் கோபுரங்களும் கட்டினர்!'' என்றாள்.

உடனே நான் ''அந்தக்கூட கோபுரங்கள் எல்லாம் இடிந்து சரிந்து குப்பை மேடாகி விட்டதே! உன்னைத் தொழுத என் பெற்றோர்கள், மூதாதைகள் எலும்பெல்லாம் மண்மேடாகி விட்டதே! அந்த தேவதைகளைப் போற்றிப் புகழ ஒன்றுமே எஞ்சி நில்லாமல் பரிதாபமாய் மாய்ந்து மறைந்து விட்டதே! வரலாற்று ஏட்டிலே அவர் பெயர் களெல்லாம் அழிக்கப்பட்டு விட்டனவே!'' என்றேன்.

''சில தேவதைகள், பக்தர்களின் உள்ளங்களிலே வாழ்ந்து, அவர்களின் இறப்பிலே மறைந்து விடுகின்றனர். ஆனால் சிலர்மட்டும் முடிவற்ற நீண்ட வாழ்க்கை வாழ் கின்றனர். என் வாழ்க்கை, நீ எங்கெங்கு காணினும் சிரிக்கும் அழகிலே வாழ்கின்றது; இந்த இயற்கை? இதுவே மலை வாழ் ஆட்டிடையனின் இன்பத்தின் ஆரம்பம்; வயல்வெளி யிலே வாழ்கின்ற கிராமத்தானின் எக்களிப்பு; மலைக்கும் சமவெளிக்கும் இடையிலே உள்ள நிலத்திலே வாழும் ஆச்சரிய மக்களின் ஆனந்தம்.

அழகு, அறிவுள்ளவனை, உண்மையான அரியாசனத் திற்கு உயர்த்துகின்றது'' என்று பதிலளித்தாள்.

பிறகு நான் ''அழகு மிக உயர்ந்த சக்தி!'' என்று மொழிந்தேன்.

''மக்களினம் எதற்கும் அஞ்சுகிறது; நீ கூடத்தான். நீயே, அமைதிமயமான ஆத்மாவின் சொர்க்கத்திற்கே பயப் படுகின்றாய்! ஓய்விற்கும் சமாதானத்திற்கும் இருப்பிடமான இயற்கைக்கே அஞ்சுகின்றாய்! நீ தேவதைகளின் தேவ

னையே, கோபக்காரனென குற்றம் சாட்டி, பீதி அடைகின் றாய்! அவனோ கருணையும் காதலும் நிறைந்தவன்! என்று மறுமொழி புகன்றாள்.

இன்பக் கனவு தோய்ந்த, ஆழ்ந்த அமைதிக்கு பிறகு நான் ''அவனவன் எண்ணத்திற்கும் சிந்தனைக்கும் தக்க வாறு, விளக்கம் கூறி இலக்கணம் வகுக்கும், அந்த அழகைப் பற்றி எனக்கு விளக்கமாகக் கூறு; நான் பலப்பல மொழிகளி லும், வகைகளிலும், வணங்கியும், வாழ்த்தியும், பெருமைப் படுத்தப்படும் இயற்கையைக்கண்டிருக்கின்றேன்!'' என்றேன்.

அழகு உன் உள்ளுணர்வைக் கவர்வது; உன் ஆத்மாவை வசீகரிப்பது; அது கொடுக்கத் தூண்டுமே தவிர வாங்க விரும் பாது; நீ அழகை நெருங்கும் போது அதன் கைகள் உன் உள்ளுணர்வின் ஆழத்தே பதிந்து பரவி, அழகை இதயத்தின் ஆட்சிக்கு அடிமைப்படுத்துவதை உணர்வாய். அது இன்ப மும் துன்பமும் ஒன்று சேர்ந்த ஓர் உயர்ந்த பேரழகு! அதை நீ கண்களால் காணமுடியாது; நீ அறிவால் புரிந்து கொள்ள முடியாது. நீ காதுகளால் கேட்கவும் முடியாது; அது புனி தத்திலும் புனிதமாய் உன் உள்ளத்தே தோன்றி உன் பாரு லகச் சிந்தனைக்கப்பாலும், பரவி விரிவடைய வல்லது!'' என்று விடை கூறினாள்.

பிறகு அந்த வன தேவதை என் அருகே நெருங்கி தன் மணங்கமழும் கைகளைக் கண்கள் மேல் வைத்தாள். அவள் என்னைவிட்டு விலகிச் சென்றபின், நான் அந்தச் சமவெளி யிலே தனியனாய் தவித்தேன். நான் மறுபடியும் நகரை அடைந்தபோது, அதன் கொந்தளிப்பு எனக்கு வெறுப்பை உண்டாக்கவில்லை. நான் அவள் கூறிய சொற்களை நினைத் தேன்.

''அழகு உள்ளுணர்வைக் கவர்ந்து கொடுக்கத் தூண் டுமேயன்றி எதையும் வாங்க மறுக்கும்!''

□ □ □

# 6. வசை பாடுவோனே அகன்றுவிடு

## Leave Me My Blamer

என்னை எப்போதும் திட்டிக் கொண்டிருப்பவனே! என்னை விட்டு அகன்று விடு! உன் உள்ளுணர்வைக் காதலியுடன் சேர்த்து ஒன்றாக்கும் காரணத்திற்காக என்னைவிட்டு அகன்றுவிடு! தாயின் அன்புடன் உன் உள்ளத்தை ஒன்றாக்கி உன் இதயத்தைத் தாய்த் தன்மையுடன் இணைக்கும் காரணத்திற்காக என்னை விட்டு அகன்று செல்! நான் என் தேம்பி அழும் உள்ளத்துடன் உறவாட வழிவிட்டு என்னைத் தனியனாக இருக்கவிடு!

நான் கனவுக் கடலிலே மிதந்து செல்கின்றேன்; நாளை வரை காத்திரு; நான் எது வேண்டுமானாலும் செய்யச் சுதந்திரம் பெற்றுள்ளேன்; உன் கண்டன நிழல் என்னை என் கீழ்மைச் சமாதிக்கு நடத்திச் செல்லும்; வேறென்ன செய்யும்? அது எனக்கு இந்த குளிர்ந்து இருகிய மண்ணைத் தான் காட்டும்!

என் கடுகு உள்ளத்தை, அதன் சிறைக் கூடத்திலிருந்து விடுவித்து, என் உள்ளங்கை மேல் நிறுத்தி, அவ்வுள்ளத்தின் ஆழத்தைத் துருவி அறிந்து அதன் இரகசியத்தை வெளிப்படுத்த வேண்டுவதே என் விருப்பம்!

உன் கூர் அம்புகளை அதன் மேல் எய்து விடாதே! ஏன் எனில் இறைவன் அதை தன் நம்பிக்கை எனும் பலி பீடத்திலே வைத்து, அதன் இரகசியத்தை ரத்தமாய் சிந்தி, பலித் தியாகம் செய்து விடப் போகின்றான்! அது பயந்து பறந்து மறைந்து விடப் போகிறது!

ஆதவன் உதிக்க, இன்பக்குயில் கூவுகின்றது. மனோ ரஞ்சிதம் தன் மணத்தைப் பரந்த வெளியெல்லாம் வாரி இறைக்கின்றது.

நான், தவறுகளாலான மெத்தை மேல் உறங்கும் உறக்கத்திலிருந்து விடுதலை பெற விரும்புகின்றேன். என்னைத் தடுத்து நிறுத்தி விடாதே! என்னை வசைபாடுவோனே!

சிறிப்பாயும் சிங்கத்தின் கர்ஜனையைக் கூறி, ஆடிடும் பாம்பின் பெயரைச் சொல்லி என்னை பயமுறுத்தாதே! என் ஆத்மா மண்ணுலக பயத்தையெல்லாம் அறியாது! கெடுதி வருமுன்பே கெடுதல் பற்றிய எச்சரிக்கையை ஏற்காது!

வசை பாடுவோனே? எனக்கு புத்திமதி கூறாதே! ஏனெனில் தொடர்ந்து வரும் துன்பங்கள், என் இதயத்தைத் திறக்க, கண்ணீர் என் கண்களைத் தூய்மைப்படுத்த, தவறுகள் என் இதயத்தின் மொழியைக் கற்பிக்கலாயின.

என்னை நாடு கடத்தி விடாதே! ஏன் எனில் உள்ளுணர்வே என் நீதிபதி: என் மனசாட்சியே என்னைக் காப்பாற்றும், நான் கள்ளம் கபடு அற்றவனாக இருப்பின்! நான் ஓர் குற்றவாளியானால் என் வாழ்க்கையையே பறித்து விடும்!

காதல் ஊர்வலம் நகருகின்றது! வானத்திலே அழகுக் கொடி விரிந்து பறக்கின்றது! இளமை இன்பப்பேரிகை கொட்டுகிறது! குற்றத்தை எண்ணி நான் மனம் நோவதைக் கலைத்து விடாதே! மல்லிகையும் முல்லையும், தூய மணத்தை வாரி இறைக்கும் பாதையிலே, நான் அமைதியாக நடக்கப் போகின்றேன்!

செல்வச் செழிப்பும், பெருமை நிறைந்த புகழும், நிரைந்த கதைகளை என்னிடம் சொல்லாதே! என் உள்ளம் இறைவனின் புகழிலே நிறைந்து உயர்ந்து உலா வருகின்றது

சட்டம், சாம்ராஜ்யம், மக்கள் என்பதைப் பற்றியெல்லாம் என்னிடம் பேசாதே? இந்த பரந்த பாருலகமெல்லாம் என் பிறப்பிடம்! உலக மக்கள் அனைவருமே என் சகோதரர்கள்!

வசைபாடுவோனே! என்னை விட்டு அகன்று விடு! நீ என்னிடம் உள்ள-தவறை உணர்ந்து வருந்தும் போரொளியை-கவர்ந்து கொள்கின்றாய்; தேவையற்ற வெற்று வார்த்தைகளை இங்கே கொட்டி அளக்கின்றாய்!



# 7. ஓ என் காதலி!

## A Lover's Call

என் அன்பின அன்பே ! நீ எங்கே இருக்கின்றாய்? நீ அந்த சிறிய சொர்க்கத்திலே, மலர் செடிகளுக்கு நீர் ஊற்றிக் கொண்டிருக்கின்றாயா? சிறு குழந்தை ஆர்வத்துடன் தன் தாயின் தனத்தைக் கூர்ந்து நோக்குவது போல், மலர்ந்த மலர்கள் உன்னை ஆழ்ந்து நோக்குகின்றனவா?

அல்லது, நீ உன் தனி அறையிலே அமர்ந்துள்ளாயா? அங்கு உன் பெருமைக்காக நல்லதன்மையே கோயிலாக கட்டப்பட்டுள்ளதா? அந்த தெய்வத்திற்கு என் உயிரையும், உடலையும், இதயத்தையும் பலியாக அர்பணித்துத் துதிக்கின்றாயா?

அல்லது, நீ ஞானுலகப் பேரறிவைப் பெற்று பெருமையுடன் இருக்க, புத்தகத்தை விரித்து வைத்துக் கொண்டு அதில் மனித வர்க்கத்தின் சிற்றறிவைத் தேடிக்கொண்டிருக்கின்றாயா? என் ஆவியின் ஆருயிரே! நீ எங்கே இருக்கின்றாய்? நீ கோயில்களிலே கும்பிடுகின்றாயா? அன்றி, என் கனவின் சொர்க்கமான வயல் வெளியிலே, இயற்கையைக் கூவி அழைக்கின்றாயா?

அல்லது ஏழைகளின் மண் குடிசையிலே வாழும், உடைந்து நொருங்கிய உள்ளத்துடன் வதியும் ஏழைகளை, உன்னுடைய இனிமையான சொற்களால் ஆறுதல் மொழி கூறுகின்றாயா? அவர்களின் கைகளிலே உன் செல்வத்தையெல்லாம் கொட்டிக் குவிக்கின்றாயா?

நீ எங்கெங்கு காணினும் இறைவனின் இதயமே! நீ காலத்தை விட சக்திமிக்கவள்!

நாம் சந்தித்த அந்தநாள் நினைவிருக்கிறதா? உன் உள்ளுணர்வு நம்மைச் சூழ்ந்து கொண்டு வாழ்த்த, காதல் கன்னிகள் நம்மைச் சுற்றி மிதக்க, ஆத்மாவின் பெரும் செயல்களைப் புகழ்ந்து பாராட்ட, நாம் சந்திக்கவில்லையா?

விலா எலும்பு, இதயத்தின் பேருலக இரகசியத்தைக் கெடுதியினின்று காப்பது போல நாம் இருவரும் பெரிய மர நிழலில் அமர்ந்து கொண்டு, மனித இனத்தின் தாக்குதலில் இருந்து அடைக்கலமடைய வில்லையா? நினைவு இருக்கிறதா?

நம்மையே நாம் நமக்குள் மறைத்துக்கொள்வது போல, ஒருவர் மேல் ஒருவர் தலை சாய்த்து, இருவரும் கை கோர்த்து, காடு, மலை, வனமெல்லாம் நடந்து சென்றதை எண்ணிப்பார்!

நான் உன்னைப் பிரிந்து விடைபெற்ற அந்த நேரத்தையும், அப்போது நீ என் உதடுகளின் மேல் ஆழப் பதிந்து அளித்த அன்பான இனிய முத்தத்தையும் மனத்திலே கூர்ந்து கேள்!

அந்த முத்தம் தான் எனக்குக் காதலிலே இணையும் உதடுகளின் சேர்க்கை. சொர்க்கத்தின் இரகசியத்தையும், நாவினால் சொல்ல இயலாததையும், புகலவல்லது என உணர்ந்தேன்.

என் பெரு மூச்சிற்கு அந்த முத்தமே ஆரம்பம்! இந்த உலகில் எல்லாம் வல்ல இறைவனின் மூச்சே மனித இனத்தை மண்மேல் உண்டாக்கியது! அதே போல் இப்பெருமூச்சு என்னை பக்தி உலகிற்கு வழி நடத்திச் சென்றது. ஆத்மாவின் பெருமையைப்பாடி வெளிப்படுத்தியது. நாம் மறுபடியும் சந்திக்கும் வரை அம்முத்தம் நிலைத்து வாழும்!

கண்ணீர், உன் கன்னத்திலே அருவியாக வழிந்தோட, நீ என்னை ஆரத்தழுவித் தழுவி அன்பு முத்தங்களைச் சொரிந்து கொண்டே ''மண்ணுலக உடல்கள் உலகக் காரியங்களுக்காக அடிக்கடி பிரிந்து பிரிந்து தனித்தனியே வாழ நேரிடும். ஆனால் காதலின் கரங்களிலே கட்டுண்டு, பாதுகாப்பாக ஆத்மாமட்டும் என்றும் இணைந்தே இருக்கும். இந்த இணைந்து பிணைந்த ஆத்மாக்களை மரணம் இறைவனிடம் எடுத்தேகும்'' என்றாய்

என் ஆருயிரே! உயிர் உன்னைத் தன் பிரதிநிதியாக தேர்ந்து எடுத்துள்ளாள்! நீ அதற்குந் தலைவணங்கு! ஏன் எனில் அவள்தான் அழகு! வாழ்க்கையின் இன்பத்தை இனிமையை, அழகுதான், தன்னைப் பின் தொடர்பவர்களுக்கு உவந்தளிப்பாள்.

என்னுடைய வெற்றுக்கைகளிலே உன் காதல் எனக்கு ஆறுதல் தரும் பெண்ணாகவும், உன் இனிய நினைவு, முடிவற்ற திருமணத்தையும் அளிக்கும்.

என் மறுபாதியான மனமே! உருவே! நீ எங்கே இருக்கின்றாய்? நீ இரவின் மௌனத்திலே விழித்துக் கொண்டிருக்கின்றாயா? அந்த உருவம் இனிமேலும் என்னுடையதல்ல! இந்த தூய்மையான தென்றல், என் இதயத்தின் அன்புத் துடிதுடிப்பு ஒவ்வொன்றையும் உன்னிடம் எடுத்தே கட்டும்!

நீ, உன் நினைவிலே, என் முகத்தை மெல்லத் தடவி, தழுவிக் கொண்டிருக்கின்றாயா? அந்த உருவம் என்னுடையதல்லவே அல்ல! பழைய அந்த இன்ப முகத்தின் மேல் இன்று துயரம் தன் நிழலைப் போர்த்து விட்டது.

உன் அழகைப் பிரதிபலித்த என் கண்களை, அழுகை உலர்த்தி மங்க வைத்து விட்டது! ஆம் பட்டுப்போய் விட்

டது! நீ உன் முத்தமழையால் நனைத்து, இன்பத்தின் இருப்பிடமாக்கிய என் உதடுகள் உலர்ந்து விட்டன!

என் அன்பின் அன்பே! நீ எங்கே இருக்கின்றாய்? கடல் கடந்து நான் கூவி அழும் என் குரலை உன்னால் கேட்க முடிகின்றதா? என் தேவைகளை எல்லாம் நீ உணர்கின்றாயா? என் பொறுமையின் பெருமையை நீ புரிந்துகொள்கின்றாயா?

வானவெளியிலே மிதக்கும் காற்று, செத்து மடியும் இந்தக் காதல் இளைஞனின் கடைசி மூச்சை உன்னிடம் ஏந்தி வரத் தகுதியுடையதா? என் குற்றச்சாட்டுகளை எடுத்துவர தேவதைகளுக்கும் உனக்குமிடையே ஏதாவது இரகசிய செய்திப் போக்குவரத்து சாதனம் இருக்கின்றதா?

என் அழகான மின்னும் நட்சத்திரமே! நீ எங்கே இருக்கின்றாய்? இந்த நிலையா வாழ்க்கை, என்னைத் தன் வயிற்றுக்குள் அடக்கி மறைத்துக் கொண்டது! துயரம் என்னை வெற்றி கொண்டு விட்டது!

எங்கே உன் புன்னகையை, களிக்கும் சிரிப்பை, இந்த வானவெளியிலே மிதக்கவிடு! அது என்னை அடைந்து என் உயிரை வாழ வைக்கும்! உயிர்ப்பிக்கும்! எங்கே உன் உடம்பெல்லாம் பொங்கி வரும் நருமணத்தைக் காற்றிலே வாரி மிதக்க விடு! அது என்னை அடைந்து வாழ வைக்கும்!

என் அன்பின் ஆருயிரே! நீ எங்கே இருக்கின்றாய்?

ஓ, காதல் எவ்வளவு உயர்ந்தது?

இமயம் போல்!

நாம் எவ்வளவு சிறியவர்கள்?

கடுகு போல்!



# 8. சாவின் சிங்காரம் or மரண அழகு

## The Beauty of Death

(இதை என் (M.E.H) மேரி E. அக்ஸல் என்பவருக்குக் காணிக்கை யாக்குகின்றேன்)

முதல் பகுதி  கூப்பாடு ! or கூவல் !

என் ஆத்மா, காதல் போதையிலே மயங்குவதால் நான் தூங்கட்டுமா ? என் உணர்ச்சிகள், இரவு பகலின் செல்வச் செழிப்பையெல்லாம் சாப்பிட்டு விட்டது ; ஆகவே நான் சிறிது ஓய்வு கொள்ளட்டுமா ?

மெழுகுவத்திகளையும் அகல் விளக்குகளையும் ஏற்றி என் படுக்கையைச்சுற்றிவையுங்கள் ! சந்தனத் தூளை நெருப்பி லிட்டு புகை மணக்கச் செய்யுங்கள் !

என் படுக்கை மேல் ரோஜா மலர்களையும் மல்லிகை முல்லை மலரிதழ்களையும் என் உடல் மேல் வாரி இறையுங்கள் !

என் கூந்தலிலே மணங்கமழும் எண்ணையைத் தடவி, கால்களின் மேல் புனுகு ஜவ்வாது பூசி விடுங்கள் !

பின்பு மரணத்தின் விரல்கள் என் நெற்றியின் மேல் என்ன எழுதி இருக்கின்றது என்பதை படித்துப் பாருங்கள்.

நான் தூக்கத்தின் கரங்களிலே இளைப் பாருகின்றேன் ; என் திறந்த கண்கள் சோர்ந்து விட்டன !

யாழின் வெள்ளிக் கம்பிகள், துடித்து இசைத்து என் உணர்வுகளைத் தடவித் தழுவட்டும்! குழலின் இசை அலைகள் என் பட்டுப்போன இதயத்தைச் சுற்றி வட்டமிடட்டும்! என் கண்களிலே புலரும் நம்பிக்கையைக் கண்டு பழமையின் பண்களைப் பாடுங்கள்! அதன் மாந்திரிகப் பொருளே, என் இதயம் இளைப்பாறும் மெல்லிய மென்மையான மெத்தையாக அமையட்டும்!

நண்டர்களே! உங்கள் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுங்கள்! புலரும்பொழுதை, மலர்கள் இதழ் விரித்து வரவேற்பது போல், தலை நிமிர்ந்து நில்லுங்கள்! என் படுக்கைக்கும் முடிவின்மைக்கும் இடையே பெரும் தூண் போல் நிற்கும் மரணமெனும் பெண்ணைப் பாருங்கள்! உங்கள் மூச்சை அடக்கிக்கொண்டு அவளின் வெண் சிறகுகள் படபடத்து எழுப்பும் சிற்றோசையை உற்றுக்கேளுங்கள்! என்படுக்கை அருகே வாருங்கள்! உங்களின் சிரிக்கும் உதடுகளால் என்கண்ணிமைகளை முத்தமிட்டு எனக்கு விடை கொடுத்தனுப்புங்கள்!

இளஞ்சிறுவர்கள், மெல்லிய மலர்க் கரங்களால் என் கைகளைப் பற்றிக் கொள்ளட்டும்! கிழவர்கள் நம் இரத்த நரம்புகள் தெரியும் கைகளை என் தலை மேல் வைத்து ஆசி கூறட்டும்! கன்னிப் பெண்கள் என் அருகே நெருங்கிவந்து இறைவனின் நிழலை என்கண்களில் காணட்டும்! என் மூச்சுடன் கடிது விரையும் கடவுளாணையின் எதிரொலியைக் கேட்கட்டும்!

இரண்டாம் பகுதி மேல் ஏற்றம்—உயர்ச்சி

நான் மலைச் சிகரத்தையும் கடந்துவந்தேன், என் ஆத்மா கட்டுப்பாடற்ற முழு சுதந்திரத்தில் மிதந்து விரைகின்றது!

நான், என் கூட்டாளிகளிடமிருந்து வெகு தூரத்தில் இருக்கின்றேன் ; என் பார்வையிலிருந்து கார்மேகம் மலைகளையெல்லாம் மறைத்து விட்டது. பள்ளத்தாக்குகள் எல்லாம் அமைதியான மௌனக் கடலின் பெருவெள்ளத்தில் மூழ்கி விட்டது ! மறதியின் கைகள் வீடுகளையும் பாதைகளையும் விழுங்கி விட்டன ! வயல்களும் புல்வெளிகளும் வெண்மையான மாயத் தோற்றத்தின் பின் மறைந்து விட்டன ! மெழுகு வத்தியின் மஞ்சள் நிறமும் மாலைச் சூரியனின் சிகப்பு நிறமும் கலந்து காணப்படும் வசந்த கால வெண் முகில் போல் தோன்றுகிறது !

அலைகளின் பாட்டுக்களும், நீரோடைகளின் இசையும் சிதைந்து, இறைந்து விட்டன ; துன்பப்படுவோரின் ஓலம் மௌனமாகி மறைந்து விட்டது ! உள்ளுணர்வின் விருப்பத்திற்கேற்ப ஆதியந்த மின்மையின் பாட்டைத்தவிர வேறு ஏதும் கேட்கவில்லை !

நான் முழுமையுமாக வெண்துகில் போர்த்து இருக்கின்றேன் !

எனக்கு எல்லாம் வசதியாக ஆறுதலாக இருக்கின்றது

நான் அமைதியில் ஆழ்ந்துவிட்டேன் !

மூன்றாம் பகுதி : நிலைத்தல்

என் மேல் போர்த்தியுள்ள வெண்துகிலை எடுத்து வீசி எறியுங்கள்; மல்லிகை, அல்லி இலைகளைக் கொண்டு என் உடலை மூடுங்கள்! தந்தப்பேழையில் உள்ள என் உடம்பை வெளியே எடுத்து விடுங்கள்! ஆரஞ்சு மலர்கள் தலையணையாக இருக்கும்படி, என்னை வைத்து விடுங்கள்!

ஓலமிடாதீர்கள்! இளமையின் இனிமையும், மகிழ்ச்சியும் பொங்கும் பாடல்களைப் பாடுங்கள்! என் மேல் கண்ணீர்

சிந்தாதீர்கள்! அறுவடை செய்யும் போதும், திராட்சை ரசம் பிழியும் போதும், பெண்கள் பாடும் பாக்களைப் பாடுங்கள்!

என் மேல் துயரப் பெருமூச்சு விடாதீர்கள்! காதல், மகிழ்ச்சி மிக்க ரேகைகளை, சாயலை உங்கள் நுனி விரல்களால் என் முகத்தின் மேல் வரையுங்கள்!

காற்றின் அமைதியை உங்களின் மந்திர முணுமுணுப்பால் கலைத்து விடாதீர்கள்! என் இதயத்துடன் உங்கள் இதயமும் கலந்து அழியாத அமரகீதங்களைப் பாடுங்கள்!

கருப்பு உடைகள் அணிந்து துக்கம் கொள்ளாதீர்கள்! வண்ண ஆடைகள் அணிந்து என்னுடன் கூடிக்களித்து நடனமாடுங்கள் !

ஏக்கம் இதயத்தை நிரப்ப, என் பிரிவைப் பற்றி பேசாதீர்கள்! கண்களை மூடிக்கொண்டு ஆழ்ந்து சிந்தித்தால் நான் எப்போதும் உங்களுடனே ஒன்றி வாழ்வதை உணர்வீர்கள்!

என்னை இளந்தளிர்ப் படுக்கைமேல் படுக்க வைத்து, உங்களின் தோழமைத் தோள்களின் மேல் ஏந்தி, மெல்ல இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லுங்கள்! என்னை எலும்புக் கூடுகள் நிரைந்த புதைக் காட்டிற்கு கொண்டு போகாதீர்கள்! ஏனெனில் அங்கு மண்டையோடுகளும் எலும்புக்கூடுகளும் உராயும் சத்தமே என் தூக்கத்தைக் கலைத்துவிடும்! என்னை சந்தனக் காட்டிற்குத் தூக்கிச் சென்று காட்டுமல்லியும் மனோரஞ்சிதமும் வளர்ந்துள்ள இடத்திலே என் புதைக் குழியை ஆழத் தோண்டுங்கள்! திறந்த சமவெளிக்கு, வெள்ளத்தால் என் எலும்புக் கூடுகள் அடித்துக் கொண்டு போகாமல் இருக்கும்படி ஆழமாகத் தோண்டுங்கள்! காலை மாலை நேரங்களில் சூரியனின் நிழல் என்அருகே வந்தமரும் படி அகலமாக வெட்டுங்கள்! எல்லா ஆடை ஆபரணங்களை

யும் அகற்றிவிட்டு பூமித்தாயின் மடியிலே என்னை மெல்ல வையுங்கள்! என்னை என் அன்னையின் தனங்களின் மேல் தவழ விடுங்கள்! என் மேல் மெல்லிய மண்ணைத் தூவுங்கள்! ஒவ்வொரு பிடி மண்ணுடனும் மல்லிகை, முல்லை, அல்லி ஆம்பல் விதைகளைக் கலந்து தூவுங்கள்! அவ்விதைகள் முளைத்து, என் உடலின் சக்திப் பொருளின் உரம்பெற்று வளர்ந்து என் இதயத்தின் மணத்தை வானமெல்லாம் வாரி இரைக்கட்டும்! என் அமைதியின் இரகசியத்தைக் கதிரவனுக் குக்கூட வெளிப்படுத்தட்டும்! கால் வலிக்க நடந்து செல்லு வோர்க்குத் தென்றலிலே மணம் மிதந்து வந்து ஆறுதலளிக் கட்டும்! நண்பர்களே! என்னை விட்டு அகன்று செல்லுங் கள்! சத்தமின்றி மெல்ல அடிமேல் அடி வைத்து, பாலைச் சமவெளியிலே மிதந்து செல்லும், மறைந்து மங்கும், மௌ னம் போல அகன்று செல்லுங்கள்!

அசையும் காற்று, ஆப்பிள் பாதாம் மலர்களை மெல்ல உதிரச் செய்வது போல, நான் இறைவனிடம் கலக்கக் கலைந்து செல்லுங்கள்!

நீங்கள் உங்களின் இன்ப இருப்பிடத்திற்குத் திரும்பிச் சென்றால் அங்கு நீங்கள் காண்பீர்கள்! மரணம் உன்னிட மிருந்தும் என்னிடமிருந்தும் பிரித்து எடுத்தேக முடியாத ஒன்றைக் காண்பீர்கள்!

இந்த இடம் விட்டு அகலுங்கள் ! நீங்கள் இங்குக் காண்ப தெல்லாம் மண்ணுலகப் பொருள்களுக்குத் தூரமானது! அர்த்தத்திற்கு அப்பால் பட்டது!

ஆகவே என்னை விட்டு அகன்று செல்லுங்கள்!



# 9. மாளிகையும் மண்குடிசையும்



## The Palace and the Hut

**மாளிகையிலே**

கதிரவன் மறைந்து, இரவு நெருங்க, மாளிகையில் நந்தா விளக்குகள் ஒளி வீச, பெருங்கதவுகளின் ஓரங்களில், விருந்தினரின் வருகைக்காக காவல்காரர்கள் கை கட்டி நின்றனர்.

விருந்தினரின் வெண்பட்டு உடையின் மேல் பொன் பொத்தான்கள் மினு மினுத்தன.

ஒரு கம்பீரமான கவர்ச்சி மிக்க வண்டி அந்த மாளிகைப் பூங்காவிலே வந்து நிற்க, சீமான்கள் பீதாம்பர உடையும், அழகு ஆபரணங்களும் ஒளி வீச மாளிகையுள் நுழைந்தனர். இசைக் கருவிகளின் இனிமையான கீதம் காற்றில் கலந்து மிதந்தது. உள்ளத்தைத் தொடும் பண்ணிற்கேற்ப நாட்டிய நங்கைகள் நடனமாடினர்.

நடு இரவிலே கிடைத்தற்கறிய மலர்களால் அலங்கறிக்கப்பட்ட, அழகிய மேஜைமேல் மிக இனிய அறு சுவை உண்டி பரிமாரப் பட்டது. விருந்தினர் நன்கு உண்டு மதுவை மனங்கொண்டபட்டும் குடித்துப்போதை தலைக் கேறி கும்மாளமிட்டனர்.

பொழுது புலர, பெருங்கூட்டத்தின் பேரிரைச்சல் மறைந்து அகல, பேருணவும் மதிமயக்கமும் கலந்து,

இரவெல்லாம் கூத்தடித்த அவர்களின் தேய்ந்த தேகத்தைச் செயற்கையான உறக்கத்திற்குத் துரத்தியது.

மண்குடிசையிலே

மாலை நேரத்திலே, கனத்த அழுக்கடைந்த உடை பூண்ட தொழிலாளி, ஒரு மண்குடிசையின் கதவைத் தட்டி நின்றான். கதவு திறந்தது மலர்ந்த முகத்துடன் மனைவி வரவேற்றாள் பிள்ளைகள் விளையாடும் நெருப்பண்டை போய் உட்கார்ந்தான்

சிறிது நேரத்தில் அவன் மனைவி, உணவைச் சிறிய மரமேஜை மேல் வைக்க, அனைவரும் சுற்றியமர்ந்து, உண்டு மகிழ்ந்தனர்.

உணவு முடிந்தவுடன் அகல் விளக்கைச் சுற்றி அமர்ந்து, அன்றைய நிகழ்ச்சிகளைப் பற்றி அனைவரும் பேசினர்.

இரவின் முன்நேரம் முடிய, அவர்களின் உதடுகளிலே புகழ்ச்சிப் பாக்களும், நன்றி மிக்க வணக்கமும் அசைந்து மிதந்தது.

அனைவரும் அமைதியாகப் படுத்து உறக்கத்திற்குள் அடைக்கலம் புகுந்தனர்.



# 10. கவிஞன் குரல்

## A Poet's Voice

முதற் பகுதி

கொடை உணர்வு என் இதயத்தின் ஆழத்திலே விதைத்து ஊன்ற, நான் கோதுமையை அறுவடை செய்து, கட்டுக் கட்டாக பசியால் வாடும் ஏழைக்குக் கொடுக்கின்றேன்,

என் ஆத்மா, திராட்சைக்கு உயிர்கொடுக்க, அதன் குலைகளைப் பிழிந்து, தாகத்தால் துடிக்கும் மக்களுக்கு அளிக்கின்றேன்.

சொர்க்கம், என் அகல் விளக்கிலே எண்ணெய் ஊற்ற, அதை நான் பலகணிப் பக்கத்தே வைத்து, இருட்டிலே திக்குத் தெரியாது தவிக்கும் வழிப்போக்கருக்குப் பாதையைக் காட்டுகின்றேன்.

நான் இவற்றையெல்லாம் செய்யக் காரணம், அவர்களிடையே நான் வாழ்வதால் தான். விதி என் கைகளைக் கட்டி என்னைத் தடுக்குமானால், மரணமே என் விருப்பமாகும். ஏன் எனில் நான் ஓர் கவிஞன்; என்னால் கொடுக்க முடியவில்லையானால், நான் வாங்கவும் மறுத்து விடுவேன்.

மக்களினம் புயலெனச்சீற, நான் அமைதியாக பெருமூச்சி விடுவேன் ; என் மூச்சு இறைவனிடம் போகுமுன், புயல் அடங்கிவிடும் என்பதை நான் அறிவேன்.

மக்கள் கூட்டம் உலகப் பொருள்களில் பற்று வைத்து வாழும்போது, நான் காதல் கதிர்களையே அணைக்கத் தேடுகின்றேன்,

ஏனெனில் அத் தீ என் இதயத்தைப் புனிதமாக்கி, அதில் உள்ள மனிதத் தன்மையின்மையைப் பொசுக்கிவிடும்.

நிலையான பொருள்கள் மனிதனைத் துன்ப மின்றிச் சாகடிக்கின்றன ; காதல் வாழும் வேதனையைத் தூண்டு கின்றது.

மக்களினம் பலவித இனங்களாயும், மதங்களாயும், ஜாதிகளாயும் பிரிந்து பலப்பல நாடுகளுக்கும் நகரங்களுக்கும் உறியவராய் வாழ்கின்றது! ஆனால் நான் எல்லா நாடு களுக்கும், இனங்களுக்கும் புதியவனாய், எந்தப் பிரிவையும் சேராதவனாய், வாழ்கின்றேன். இந்த பாருலகமே என் நாடாய், மக்களின் குடும்பமே என் இனமாய் இருக்கின்றது.

பல மற்ற மனிதர் தங்களைப் பலப்பலவாறு பாகுபாடு படுத்திக் கொண்டு வாழ்கின்றனர் என்பது வருத்தத்துக் குறியது. குறுகிய இவ்வுலகத்தை பேரரசாயும், சிற்றரசாயும், நாடாகவும் நகராகவும் துண்டாடுவது அறிவின்மையே !

மனித இனம், உள்ள மெனும் கோயிலைப் பாழ் படுத்தவே ஒன்று சேருகின்றது ; உலக உடல்களுக்குச் சமாதி கட்டவே கை கோர்த்து ஒன்றாகிறது. என் ஆழமான உள்ளத்தே எழும் நம்பிக்கைக்குரல் "காதல் மனிதனின் மனத்தை வேதனையால் வாழவைப்பது போல், அறியாமை அறிவின் வழியைக் கற்பிக்கிறது," என்று கூறுவதை கேட்டுக் கொண்டு உயர்ந்து நிற்கின்றேன். வேதனையும் அறியாமையும் இன்பத்திற்கும் அறிவிற்கும் வழி காட்டுவதால் பேரிறைவன் இந்த கதிரவனுக்குக் கீழ் ஒன்றையும் வீணிற்கு உற்பத்தியாக்கவில்லை" என்றே கூறுவேன்.

இரண்டாம் பகுதி

அழகிய என் நாட்டினிடம் கவர்ச்சி உண்டாக, துன்பத்தால் வாடும் இம் மக்களிடம் எனக்கு ஓர் காதல் தோன்றுகிறது. ஆனால் இவர்கள் கொள்ளை அடிப்பதால் தூண்டப்பட்டு, தேச பக்தி என்று கூறி கொலை புரியக் கொக்கரித்து, பக்கத்து நாட்டின் மேல் படையெடுத்து. மனிதத்தன்மையற்று, கொடுமை புரிவார்களானால், நான் என் மக்களையும் நாட்டையும் வெறுத்து ஒதுக்குவேன் !

நான் பிறந்த மண்ணின் பெருமையைப்பாடி, என் குழந்தைப்பருவ வீட்டைக் காண ஏங்குகின்றேன். ஆனால் அதில் வாழும் மக்கள் வழி நடப்போருக்கு நிழல் அளிக்க, அவர் தேவைக்கான உணவு கொடுக்க மறுப்பார்களானால், அவர்களைப் போற்றி பெருமைப் பண்பாடாமல் அழுகைப் பாட்டாகவும் பிலாக் கணமாகவும் பாடித்தூற்றுவேன். என் ஏக்கத்தை மறதியாகவும் மாற்றிக் கொள்வேன். என் உள்ளக் குரல் ''தேவையானவர்க்கு ஆறுதலளிக்காத வீடு. குப்பை மேடாகவே தகுதி யானது'' என்று கூறக்கேட்கிறேன்.

நான் பிறந்த ஊரை, என் நாட்டின் காதலிலே கொஞ்சம் பகிர்ந்து நேசிக்கின்றேன். என் நாட்டை, உலகக் காதலிலே கொஞ்சம் பகிர்ந்து அன்பு செய்கின்றேன் ; இந்த உலகத்தை என் முழுக்காதலையும் கொண்டு காதலிக்கின்றேன், ஏனெனில், இவ்வுலகமே மனித இனத்தின் சொர்க்கம் ! இறைவனின் உணர்ச்சி ஊற்று !

மக்களினமே, மண்மேல் பேரிறைவனின் உணர்ச்சி ஆனால் இந்த மனித இனமே அழிவின் மத்தியிலே நின்று கந்தல் துணிகொண்டு அவமானத்தை மறைத்து, குழிவிழுந்த கன்னங்களின் மேல் கண்ணீரைச் சொரிந்து, அதன் குழந்தைகளை வேதனைக் குரலால் பரிதாபமாக அழைக்கின்றது. ஆனால் அதன் குழந்தைகள் படைஎடுப்புப் பண்பாடி, கத்தியைத் தீட்டிக் கொண்டு இருப்பதனால் அவர்களின் தாயின் குரலைக் கேட்க முடியவில்லை.

மக்களினம், அதன் மனிதருக்குக் கொடுக்கும் விண்ணப்பம் கேட்கப்படவில்லை. அதிலே ஒருவன் அவன் குரல் கேட்டு அவன் கண்ணீரைத் துடைத்து, ஆறுதல் மொழி கூறினால் மற்றவரெல்லாம் ''இவன் உணர்ச்சிவயப்பட்ட கோழை'' என்கின்றனர்.

மக்களினமே மண்மேல் பேரிறைவனின் உணர்ச்சி; அந்த பேரிறைவன் நல்லெண்ணத்தையும் காதலையும் பிரசாரம் செய்கின்றான். ஆனால் இந்த மக்கள் அந்த புத்திமதியை எள்ளி நகையாடுகின்றனர். அதை ஏசுகிருஸ்த்து கேட்டார்; சிலுவையில் அறையப்பட்டார்; அதுவே அவர் கண்ட பலன். சாக்கரிடீஸ் அவர் குரலைக் கேட்டு பின்பற்றினார் ; நச்சுக் கோப்பையே அவர் பெற்ற பரிசு! ஏசுவையும் சாக்கரிடீஸையும் பின் பற்றும் மக்களைக் கொலை செய்யாமல் கீழே தள்ளி அவமானப் படுத்துகின்றனர். ''இந்தச் செயல் கொலை விடக் கொடுமையானது,'' என்கின்றனர்.

ஜெருசேலம் ஏசுவையும், ஏதன்ஸ்நகர் சாக்கரிடிசையும் கொலை செய்ய முடியாது. அவர்கள் அழிவின்றி, முடிவின்றி, இன்றும் வாழ்கின்றார்கள். எள்ளிநகைப்பதும், கொலை செய்வதும், அவமானப்படுத்துவதும், இறைவனை பின்பற்றுவோரை வெற்றி கொள்ளாது; என்றும் அவர் புகழ் வளர்ந்து வாழும்!

## மூன்றாம் பகுதி

நீயும் மனித இனத்தைச் சேர்ந்ததால் நீ என் சகோதரன் நாம் இருவரும் புனிதமான உணர்வின் குழந்தைகள்; நாம் மண்ணினால் செய்யப்பட்டவர் ஆனதால் இருவருமே சமமே!

நீ என் வாழ்க்கைப் பாதையிலே துணைவனாய் மறைந்த உண்மையின் பொருளை உணர உதவுபவனாய் இருக்கின்றாய். நீயும் மனிதனே என்பது போதும் நான் உன்னைச்

சகோதரனாய் நேசிப்பதற்கு நீ என்னைப் பற்றி உன் விருப்பப்படி பேசலாம்; ஏனெனில் நாளை வருங்காலம் என்பது உன்னை எடுத்தேகி, உன் பேச்சுக்களைத் தன்னுடைய நீதிக்கு சாட்சியாக்கி, உனக்கு நீதி வழங்கலாம்.

நீ என்னுடைய செல்வத்தையெல்லாம் கவர்ந்து கொள்ளத் தகுதியுடையவன்; அது உனக்குத் திருப்தி அளிக்குமா? ஏனெனில் என் பேராசை, செல்வத்தைக் குவிக்கத் தூண்டுகிறது.

நீ என்ன விரும்புகின்றாயோ அதன்படி என்னை ஒழித்து விடலாம்; ஆனால் என் உண்மைகளை நீ தொடக் கூட முடியாது, நீ என்னைக் குத்தி கொலை செய்து, ரத்தம் சிந்த, என் உடலைப் பொசுக்கி விடலாம். ஆனால் என் உணர்வுகளை உன்னால் காயப்படுத்தவோ கொல்லவோ முடியாது.

நீ என் கைகளிலே விலங்கிட்டு, கால்களிலே கனமான இரும்பைக் கட்டி, இருண்ட சிறைக்குள் அடைத்து விடலாம் ஆனால் பரந்த வெளியிலே வீசும் தென்றல் காற்று போன்ற என் சுதந்திரச் சிந்தனைகளை, என்றும் அடிமைகொள்ளவே முடியாது.

நீ என் சகோதரன்; உன்னை நேசிக்கின்றேன். மாதா கோயிலிலே மண்டியிட்டு, மசூதியிலே தொழுது, கோயிலிலே கும்பிட்டு வணங்கி, நான் உன்னைக் காதலிக்கின்றேன்.

நீயும், நானும், மற்றவர்களும் ஒரே மதத்தின் மக்கள்! உலகில் உள்ள மதங்கள் எல்லாம் பேரிறைவனின் அன்புக் கரத்தில் உள்ள விரல்கள் போன்றன. அவை அனைவருக்கும், உணர்ச்சியின் முழுமையை அளித்து விருப்பமுடன் வரவேற்க கைகளை ஏந்தி நிற்கின்றன.

நான் அறிவின் வழி வந்த உண்மைக்காக உன்னை நேசிக்கின்றேன்; அந்த உண்மையை என் அறிவின்மை காரணமாகக் காணமுடியவில்லை. ஆனால்அது உணர்வின் செயலாகையால் அதை புனிதப் பொருளாகப் போற்றுகின்றேன். உம் உண்மையும் என் உண்மையும் இனி வரும் உலகில் பூவும் மணமும் போல் ஒன்றெனக் கலந்து ஓர் அழிவற்ற உண்மையாகி முடிவின்மையிலே, அழகும் காதலும் போல் வளர்ந்து வாழும்.

நீ பலமான கொடுங்கோலன் முன் உள்ள ஓர் பலமற்றவனாகவும், பேராசை கொண்ட பணக்காரன் முன் ஏழையாகவும், வாழ்வதால் நான் உன்னைக் காதலிக்கின்றேன்.

நான் கண்ணீர் சிந்தி உனக்கு ஆறுதல் அளிக்கின்றேன்; அக்கண்ணீருக்குப் பின்னிருந்து நீதிக்கரங்கள் உன்னை அணைப்பதையும் உன்னை தண்டித்தவர்களைக் கண்டு சிரித்து மன்னிப்பதையும் காணுகின்றேன். நீயே என் சகோதரன்; நான் உன்னை அன்புடன் நேசிக்கின்றேன்!

நான்காம் பகுதி

நீ என் தம்பியாயிற்றே! பின் ஏன் என்னுடன் சண்டையிடுகிறாய்? நீ என் நாட்டின் மேல் படையெடுத்து, பதவியையும் பெருமையையும் தேடித்திரிவோரைத் திருப்தி படுத்த எம்மை ஏன் கொடுமைப் படுத்துகின்றாய்?

உன் தாயின் கண்ணீரால் உயர்ந்த பெருமையையும் உன் இரத்தத்தால் புகழையும் விலைக்கு வாங்கும் அவர்களுக்காக நீ ஏன் உன் மனைவி மக்களை விடுத்து மரணத்தை தொடர்ந்து தூரதேசங்களுக்குச் செல்கின்றாய் ?

உடன் பிறந்த மனிதனைக் கொள்வது ஒருவனுக்குப் பெருமை அளிப்பதா? நீ அதை பெருமைக்குறிய செயலாகக்

கருதினால், அதைத்தொழுது வணங்க தன் தம்பி ஏபெலைக் கொன்ற கெயினுக்கு ஒரு கோயில் கட்டிவிடேன்!

தற்காப்பே இயற்கையின் முதல் சட்டமா? பின் ஏன் உன்சகோதரனைத்துன்பப்படுத்தி தன் குறிகோளை அடைய பேராசை, உன்னை தன்னலத் தியாகம் செய்யத் தூண்டுகிறது?

''மற்ற மக்களின் சுதந்திரத்தைப் பறித்தே நம் வாழ்க்கையை நிலைக்கவைக்க ஆசை இடமளிக்கிறது'' என்று கூறும் தலைவனிடம் விழிப்பாயிரு தம்பி!

மற்றவர் சுதந்திரத்தைக் காப்பதே மிக உயர்ந்த அழகான மனிதச்செயலாகும். நான் வாழ, மற்றவரைக் கொலை செய்யவேண்டுமானால், நான் என் சாவையே பெருமைக் குறியதாகக் கருதுவேன்; என் பெருமையைக் காப்பாற்ற, என்னைக் கொல்ல முன் வருபவரைக் காண வில்லையானால், அழிவின்மைக்காக, அழிவின்மை வருவதற்கு முன்னமே என் கையாலேயே என் உயிரைப் போக்கிக் கொள்ள சிறிதும் பின்வாங்க மாட்டேன்.

சகோதரனே! தானே உயர்ந்தவன் எனும் கண் மூடித் தனத்திற்கு சுய நலமே காரணம். உயர்ந்தவன் நானே எனும் கர்வம் பிரிவை உண்டாக்க, அப்பிரிவு அதிகாரத்தைத் தோற்றுவிக்க, அவ்வதிகாரம் வெறுப்பிற்கும் கொடுங் கோன்மைக்கும் வழிகாட்டுகிறது.

அறியாமை இருட்டைவிட நீதியும் அறிவும் சக்தி வாய்ந்ததென ஆத்மா நம்புகிறது அறியாமையும் அடக்கு முறையும் பாதுகாத்து பலப்படுத்த அதிகாரம் கத்தியைக் கொடுக்கின்றது. அந்த அதிகாரம் தான் பாபிலோனை அழித்து, ஜெருசேலத்தின் அடித்தளத்தையே அதிரச் செய்தது; ரோமாபுரியைப் பாழ் அடையச் செய்தது; அந்த

அதிகாரம்தான் குற்றவாளிகளைத் தலைவர்கள் என்று மக்களைக் கூவச்செய்தது! தலைவர்களின் மனிதத்தன்மை யற்ற செயல்களை யெல்லாம் புகழ்பாடும் காவியங்களாக்கி, சரித்திரம் படைக்க, சரித்திர ஆசிரியனை ஏவிவிட்டது; அவன் அடிபணிந்தான்!

நான் இயற்கைச் சட்டத்தின் நீதியைப் பெறவும், அதைப்பாதுகாக்கவும் என் பேரறிவின் கட்டளைக்கு மட்டுமே கீழ்படிவேன்.

அதிகாரத்தின் ஆட்டத்தால் கொலைகாரன் கொல்லப் படும்போதும், திருடன் சிறைக்கூடத்தில் அடைக்கப்படும் போதும், அண்டை நாட்டின் மேல் படை எடுத்து அப்பாவி மக்களை கொன்று குவிக்கும் போதும், நீதி என்ன செய் கின்றது? கொள்ளைக்காரன் சாதாரண திருடனுக்குத் தீர்ப்பு கூறும் அதிகாரத்தைப் பற்றி நீதி என்ன நினைக்கும்? படுகொலை புரியும் பாதகன், கொலைகாரனை தண்டிக் கின்றான் எனில் எது நீதி?

நீ என் சகோதரன்; நான் உன்னைக் காதலிக்கின்றேன்; நேசிக்கின்றேன். பெருந்தன்மையும், கருணையும் கொண்ட நீதியே காதல். உன் இனத்தையும், மதத்தையும் கருதாமல் உன் மேல் உள்ள காதலை நீதி ஆதரிக்கவில்லை யானால், தூய்மையான காதல் என்னும் வெளிவேடத்திற்குள்ளே குரூரமான தன்னலத்தை மறைத்து வைத்து ஏமாற்று கின்றவனாவேன்.

முடிவு

என் ஆத்மாமே, என் வாழ்வின் வேதனையிலும், துயரத்திலும் என்னைத் தேற்றுவிக்கும், ஆறுதலளிக்கும் தோழனாகும்!

தன் ஆத்மாவை நண்பனாக்கிக் கொள்ளாதவன் மனித வர்க்கத்தின் விரோதியாவான் !

தன்னுள்ளே மானிட மார்க்கத்தைக் காணாதவன் வெறுப்புற்று அழிந்துவிடுவான் !

வாழ்க்கை என்பது தன்னிலிருந்தே தோன்றுவதே தவிர சுற்றியுள்ளதிருந்து நம்மை வந்து அடைவது அல்ல.

நான் ஒரு சொல் கூறவந்தேன், கேளீர் ! இறப்பு (மரணம்) நான் கூறவந்ததைத் தடுக்குமானால், நாளை அது வேறொருவரால் சொல்லப்படும். ஏன் எனில் அழிவின்மை எனும் புத்தகத்திலே நாளை என்பது எந்த ஒரு இரகசியத்தையும் புதைத்து வைப்பதில்லை.

இறைவனின் பிரதிபலிப்பான காதல் பெருமையிலே, அழகு ஒளியிலே, நான் வாழவந்தேன். 'நான் இறப்பிலும் வாழ்வேன்' என்பதை உணர்ந்த மக்கள் என்னை வாழ்வின் பேரரசிலிருந்து துறத்திவிட முடியவில்லை. இதோ நான் வாழ்ந்து கொண்டே இருக்கின்றேன்.

அவர்கள் என் கண்களைப் பறிப்பார்களானால் நான் அழகைப் பாட்டாகவும், காதலை கீதமாகவும் கேட்டுக் கொண்டே இருப்பேன்.

அவர்கள் என் காதுகளை அடைத்து விடுவார்களானால், காதல் மணமும், அழகு வாசனையும் கலந்து தோட்டுவரும் தென்றலிலே மெய் மறந்து மகிழ்வேன்.

அவர்கள் என்னை வெறுமையிலே (சூன்யத்திலே) தள்ளுவார்களானால் அழகான காதலின் அருமைக் குழந்தையான' ஆத்மாவுடன் இன்பமாகப் பிணைந்து வாழ்வேன்.

நான் எல்லோருடனும் எல்லோருக்காகவும் எப்போதும் வாழவந்தேன்; நான் தனிமையிலே இன்று செய்யும் செயல்கள் எல்லாம் நாளைக்கு மக்கள் வாயால் எதிரொலிக்கும்.

நான் இன்று ஒரு இதயத்திலே புகல்வதை, நாளை பல இதயங்கள் பறை சாற்றும்.



# 11. சாவூர்

## The city of the dead

நேற்று நான் ஓசை நிரம்பிய நகரின் வேதனையினின்று விடுவித்துக் கொண்டு, பரந்த வயல் வழியே, இயற்கை தன் பச்சை கம்பளத்தை விரித்து வரவேற்ற குன்றை அடைந்தேன். அப்போதே என்னால் மூச்சு விட முடிந்தது.

நான் நகரைத் திரும்பி நோக்கினேன். அதன் அழகு மசூதிகளும், அரசாங்க அரண்மனைகளும் புகைப் புடவையுடுத்தி விளங்கின.

மனிதனின் பயணத்தைப் பரிசிலனை செய்து பார்க்க முற்பட்டேன். அவன் வாழ்நாளெல்லாம் துன்பமும் போராட்டமுமே நிறைந்திருக்கும் முடிவிற்கே வழி நடத்திச் சென்றது.

'ஆதாமின் பிள்ளைகள் என்ன செய்தனர்?' என்று எண்ணக்கூடாதென்று, இயற்கையின் புகழ் முடியான வயல் வெளி மேல் என் கண்களைத் தவழ விட்டேன். அதன் ஒரு ஓரத்திலே மரங்களால் சூழப்பட்ட இடுகாட்டைக் கண்டேன்.

மக்கள் உயிருள்ளபோது வாழும் மாநகரையும், மாண்டபின் புதைக்கப்படும் மரண நகரையும் ஒப்பிட்டுப் பார்த்தேன். முடிவற்ற துன்பம் நிறைந்த அந்த நகரையும், அமைதி ஆட்சி புரியும் இந்த இடுகாட்டையும் ஒப்பிட்டேன்—மக்கள் வாழும் அந்த நகரிலே நம்பிக்கையும் விரக்தியும், அன்பும் வெறுப்பும், இன்பமும், துன்பமும், வளமையும் வறுமையும், விசுவாசமும் நன்றியின்மையும் வாழ்வதை நினைத்தேன்.

இந்த இநகாட்டு நகரிலே புதைக்கப்பட்ட உடலை, இயற்கை இரவின் அமைதியிலே மண்ணாக மாற்றி, புல்லாக வும் பூண்டாகவும், மிருகமாயும், பின் மனிதனாகவும் மாற் றும் மகிமையைக்கண்டேன். என் உள்ளம் இவ்வாறு எண்ண வெளியில் மிதந்து வரும் போது, மெதுவாக பயபக்தியுடன் நகர்ந்து வரும் மரண ஊர்வலத்திலே, வான்வெளியையெல் லாம் நிரப்பும் துன்ப இசை பரவுவதைக் கேட்கலானேன். அது ஓர் இறுதி ஊர்வலம். இறந்தவன் பின்னே அவனுக்காக அழுது வருந்தும் உயிர்க்கூட்டம் தொடர்ந்து வரலாயிற்று. அந்தப் பாடை புதைகுழியை அடைந்தவுடன் பார்ப்பனன் வேதமோதி தூபமிடலானான்; வாத்தியக் காரன் பாடி ஓய்ந்து விட்டான்; பின்பு பெரிய மனிதர்கள் ஒவ்வொரு வராய் வந்து அழகான வார்த்தைகளால் அருமையாக அவன் புகழைப் பாடினர்.

அழகான பெரிய பாடையிலே, இரும்பாலும், கல்லா லும் அமைக்கப்பட்ட பாடையிலே இறந்தவன் அமைதி அடைய, பெரிய மணங்கமழும் பூமாலை சூடிவிட்டு அக்கூட் டம் கலைந்து சென்றது.

அந்தப் பிரிவுபசாரம் கூறியவர்கள் நகரை அடைந்த னர். அந்தி மாலை சூரியன் மலைகளிடையே மறைந்தான். இயற்கைப் பெண் தன் தூக்கத்திற்கு தயாராகிக் கொண்டி ருந்தாள். எனக்கு நானே முணுமுணுத்துக்கொண்டு தூரத்தி லிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

பிறகு இரு மனிதர்கள் பெரும் கனத்துடன் தூக்கிவரும் மரப்பெட்டியையும் அவர்களின் பின்னே அசிங்கமான பெண் ஒருத்தி சிறு பச்சிளங்குழந்தையைத் தூக்கி வருவதையும் கண்டேன். கடைசியாக உள்ளத்தை உடைக்கும் கண்களுடன் பெண்ணையும் பெட்டியையும் மாறி மாறி நோக்கி வரும் நாயையும் கண்டேன்.

இது ஓர் ஏழையின் சாவூர் பயணம். இந்த இறப்பின் விருந்தாளி, கொடூர சமூகத்திற்கு துன்பம் நோய்ந்த துணைவியையும் அவளின் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள பச்சிளங்குழந்தையையும், தன் தலைவனின் பிரிவை அறிந்து வருந்தும் நன்றியுள்ள நாயையும் விட்டுச் சென்றான்.

அவர்கள் புதைகுழியை அடைந்தவுடன் பெட்டியை அதில் இறக்கி அடக்கம் செய்துவிட்டு, சில வார்த்தைகளால் இயற்கையைத் தொழுதபின்பு விரைந்து திரும்பினர். ஆனால் அந்த நாய்மட்டும் திரும்பித் திரும்பி தன் தலைவனின் புதைக்குழியைப் பார்த்துப் பார்த்து நகர்ந்தது.

மக்கள் வாழும் நகரைப் பார்த்து ''இது கொஞ்சம் பேருக்கே சொந்தமானது'' என்றேன். பின்பு அந்த இடுகாட்டை நோக்கி ''இதுவும் கொஞ்சம் பேருக்கே சொந்தமானது; இயற்கையே எல்லோருக்கும் சொர்க்கம் எங்கே இருக்கிறது?'' என்று பிதற்றினேன்.

கதிரவனின் நீண்ட, அழகிய, பொன் நிற ஒளி, ஊடுருவிச் செல்லும் மேகக்கூட்டத்தைக் ஒருகுரல் ''எல்லாவற்றிற்கும் மேலே,'' என்று இயம்புவதாய் உணர்ந்தேன்.



# 12. வான் பண் (மழைப்பாட்டு)

Song of The Rain

□

நான் இறைவன் விண்ணிலிருந்து விடும் வெள்ளி நூல் இழையல்லவோ !

இயற்கை என்னை வயலையும் வெளியையும் அழகு செய்ய சுமந்து சென்றாள்!

உதய மங்கை பூங்காவை அழகுசெய்ய விண் மகுடத்திலிருந்து கவர்ந்த முத்தாரமல்லவோ!

□

நான் விம்மி அழ சிகரங்கள் சிரிக்கின்றன;
நான் தவழ்ந்து விழ மலர்கள் மகிழ்கின்றன;
நான் தலைவணங்க பயிர்கள் தலைநிமிர்கின்றன.
வயலும் வெண்முகிலும் காதலர்கள் அன்றோ?
நான் இவற்றிடையே கருணைமழை தூதுவன் தான்!
நான் வயல்வெளிப் பெண்ணின் தாகம் தீர்ப்பேன்!
நான் வெண்முகிலின் வேதனையை விரட்டிடுவேன்!
பேரிடி என் வருகையைப் பறை சாற்றும் !
வானவில்லோ என் ஏகுதலை இயம்பிவிடும்!

□

நான் மண்ணுலக வாழ்வுபோல் இழிவான!
பொருளின் காலடியில் உதயமாவேன்;
இறப்பின் விரிந்த சிறகிடையே மறைந்து
பறந்து சென்று முடிவடைவேன்!

நான் பொங்கும் கடலின் வயிற்றில் பிறப்பேன்!
வீசும் தென்றலுடன் விண்ணில் உயர்வேன்!
மழை வேண்டி நிற்கும் வயல்கண்டால்
சோ எனப் பொழிவேன்; பயிர்கள் செழிக்கும்!

□

மலர்களிலெல்லாம் இணைந்து மகிழ்வேன்!
என் குரல் அனைவருக்கும் கேட்கும்,
ஆனால் உணர்ச்சி கொண்டோரே அறியமுடியும்!
என் மென்மையான விரல்களால்
காற்றின் வெட்பம் என்னை ஈன்றெடுக்கும்!
ஆனால் நானோ அதையே கொல்லுகிறேன்!
ஆம்... பெண் ஆணிடமிருந்து பலம் பெற்றாள்;
பின்போ அவளே ஆண்களை அடிமைகொள்வாள்!

□

நான் தான் கடலின் அழுகை!
வயல் வெளியின் புன் சிரிப்பு!
வான் வெளியின் கண்ணீர் துளிகள்!
ஆமாம் காதலும் அப்படித்தானே-
அன்பெனும் ஆழ்கடலின் அழுகையாகி,
உணர்வெனும் வண்ண வயலின் களிப்பாகின்றதே!

□ □ □

# 13. கைம்பெண் குழவி



**The widow and her son**

வடலெபனான் நகரைக் காரிருள் கவ்வியது. கடலோர சமவெளியில் உள்ள ஊர்களின் மேல் பனி படர்ந்து பரவலாயிற்று. வயல்வெளியெல்லாம் மூடுபனி, பெரும் பரப்பாய் இயற்கையின் கோபத்தைப் பறிப்பிக்கத் தயாராயிற்று. அமைதி ஆட்சி புரியும் வேளையிலே, இதுகாறும் தெருவில் உலவிய மக்கள், வீட்டுக் கூட்டில் நுழைந்தனர்.

நகரினின்று விலகி நின்ற ஒரு தனி வீட்டிலே வாழ்ந்த பெண் ஒருத்தி, கணப்புத் தீ அருகமர்ந்து கம்பள நூல் நூற்றுக் கொண்டிருந்தாள். அவளின் ஒரே ஆசைக்குழந்தை அவள் முகத்தையும், கொழுந்து விட்டெரியும் தீயையும் மாறி மாறி பார்த்துக் கொண்டிருநதது.

அச்சிறிய வீடு அதிரும்படி ஒரு பயங்கரப் பேரிடி முழங்க, குழந்தை அலறி அன்னையின் ஆழ்ந்த அன்பிலே அடைக்கலமடைய, அணைந்து நின்றது. அவள் உடனே அக்குழவியை எடுத்து அணைத்து அன்பு முத்தமழை பொழிந்தாள். பின்பு அவனைத் தன் மடிமீது அமர்த்தி ''மகனே பயப்படாதே இயற்கை தன் பலத்தை மனிதனின் பலவீனத்துடன் ஒப்பு நோக்குகிறது. வானத்தினின்று விழும் இப்பனிக்கும் மேலே, வீசும் காற்றிற்கும் மேலே, ஓர் பேறிறைவன் இருக்கின்றான். அவனே இவ்வுலகைப் படைத்து இதன் தேவையையும் அறிந்தவன். பலமற்ற மக்களைத் தன் கருணைக் கண் கொண்டு காண்பவன்.

என் மகனே! தைரியமாயிரு. இயற்கை வசந்தத்தில் புன்னகை பூத்து, கோடையில் குலுங்க நகைத்து, இலையுதிர் காலத்தே கோட்டுவாய் விட்டு, இந்த மாரிக் காலத்தே கண்ணீர் விடுகிறது. மண்ணில் மறைந்துள்ள உயிர்களுக்கு இதன் கண்ணீர் தண்ணீராகி உயிரளிக்கின்றது.

என் அன்பே! நீ கண்ணுறங்கு! உன் அப்பா முடிவின்மையினின்று நம்மை நோக்குகின்றார். இந்த பனியும் இடியும் நம்மை அவர் அருகே கொண்டு செல்லுகின்றது.

தூங்கு நீ என் கண்மணி! இந்த வெண்பனிப் போர்வை நம்மைக் குளிரால் நடுங்கச் செய்கின்றதேயன்றி, பலவித விதைகளையும் வெப்பமாக வைத்திருந்து, செடியாக வளர்க்க, அழகிய மலர்கள் மணம் கமழ பூக்கின்றன.

மகனே! இவ்வாறே மனிதனும், துன்பத்தையும், விம்மியெழும் பிரிவையும் கசக்கும் பொறுமையையும், விரக்தியான துன்பங்களையும், கடந்தாலன்றி காதலை அடைய முடியாது.

குழந்தாய் நீ தூங்கு! கடும் இருட்டிற்கு பயப்படாமல் கடிக்கும் குளிருக்கும் அஞ்சாமல் இருக்கும் உன் உள்ளுணர்வை, இன்பக்கனவுகள் தாலாட்டட்டும்!

தூக்கம் தோய்ந்த கண்களுடன், குழந்தை அன்னையின் முகத்தை ஆவலுடன் நோக்கி ''அம்மா! என் கண்களெல்லாம் கனத்திருக்கின்றன. ஆனாலும் என் தொழுகையை முடிக்காமல் தூங்க முடியாது.'' என்றது.

அந்தப் பெண் அதன் தெய்வக்களை பொருந்திய முகத்தை நோக்க, பெருகி வரும் கண்ணீரால் பார்வை பஞ்சடைய,

“மகனே! என்னுடனே நீயும் பாடு!” இறைவனே ஏழைகளிடம் கருணை காட்டு! அவர்களைக் கடுங்குளிரிலிருந்து காப்பாற்று அவர்களின் நடுங்கும் உடம்பை உன் கருணைக் கைகளால் அணைத்துக் கொள்! இந்தப் பொந்தல் குடிசையிலே படுத்துறங்கும், பசியாலும் குளிராலும் பரிதவிக்கும் அனாதைகளை அன்பு கூர்ந்து காப்பாற்று. நல் வழித்தோன்றல்களை வளர்க்க வழியின்றி, வருங்காலம் எனும் பயம் உடலையும் உயிரையும் நடுங்க வைக்க, இந்த கைம்பெண்களின் உதவிக் குரலை உற்றுக் கேட்பீரோ? வலிவற்றோரின் வருத்தத்தைக் காண எல்லா மக்களின் உள்ளத்தையும் திறந்துவிடு. கதவை இடிக்கும் இந்த துன்பம் தோன்றுந்தோறும், வெப்ப வீட்டிற்கு வழி நடத்திச் செல்வீரா?

இயற்கையே! கோபத்தால் கொதித்து வீசும் இப்புயலிலிருந்து, இப்பறவைகளின் இருப்பிடமான வயலையும் மரங்களையும் காப்பாற்று; நீவிரே கருணையும் காதலும் கவர்ந்த கவின் பெறும் உருவம்!”

தூக்கம் அக்குழந்தையின் உள்ளுணர்வைக் கவர்ந்தபின் படுக்கையிலிட்டு கண்களைத் தன் துடிக்கும் உதடுகளால் முத்தம் மிட்டாள். பின்பு கணப்புத் தீயருகே சென்றமர்ந்து கம்பள நூல் நூற்க ஆரம்பித்தாள்.

○ ○ ○

## 14. ஒ கவிஞரே !

**The Poet**

கவிஞனே இவ்வுலகையும் வரும் உலகையும்
இணைக்கும் பிணைக்கும் சங்கிலி !
கவிஞனே தெள்ளிய நீரூற்று !
எல்லா தாகங்கொண்ட ஆத்மாக்களும்
அந்த நீரைப்பருகியே வாழும் !
அழகு ஆற்றின் நீர் பாய்ந்து வளர்த்த
மரங்களின் கனிந்த கனிகளை,
பசியுள்ளம் கொண்டோர் புசிக்க
ஏங்கிநிற்கும் மரமே இக்கவிஞன் !

தளர்ந்த உள்ளுணர்வைத் தன்
அருமையான பாக்களால் மலரவைக்கும்
இவனன்றோ கவிதைக் குயில் !
ஆகாயத்தின் முகத்தை மூடும்படி
வளர்ந்தும் உயர்ந்தும் பரவும்
வான மண்டலத்துவெண்முகில்
இந்தக் கவிஞன் தான் !
வாழ்வின் வயலிலே வளரும்
பூக்களின் மேல் நீர் பொழிந்து
மலர்கள், ஒளியை வர வேற்க,
பட்டான இதழ்களை மலரவைப்பவன்
இக்கவிஞன் அன்றி வேறுயார் ?

□

கவிஞன் ஓர் தேவதூதன் ! தேவமங்கை
இவனை மக்களிடையே தன்
கொள்கைகளைப்பரப்ப அனுப்பினாள் !
கவிஞன், காரிருளால் வெற்றி கொள்ளப்படாத,
பெரும் புயலால் அணைக்கப்படாத,
கலங்கரை விளக்கம் போன்றவன் !
இந்த ஒளிவிளக்கு இஷ்டாரின் காதல்
எண்ணெயால் நிரப்பப்பட்டு,
அப்போலனின் இன்னிசையால்
ஒளி ஏற்றப்பட்டது !

□

கவிஞன், எளிமையையே ஆடையாக,
அன்பையே அணிகலனாய் பூண்ட,
ஓர் தனித்தன்மை கொண்ட தனிமை ஓவியன் !
அவன் இயற்கையின் மடிமேலமர்ந்து
உணர்ச்சி பெற்று, இரவின் அமைதியிலே
தங்கி வாழ்ந்து, இறங்கிவரும்
உள்ளுணர்விற்குக் காத்து நிற்பான் !

□

கவிஞன், அன்பு வயலிலே தன் இதயத்தின்
விதைகளை, வாரி இறைத்து தூவிவிட,
மக்களினம் பண்பட்டகதிர்களை
அறுவடை செய்து ஆனந்தம் அடைகின்றது !

□

கவிஞன், வாழும் போது மக்களினத்தால்
ஒதுக்கப்பட்டான் ; மறைக்கப்பட்டான்.

மண்ணுலகைத் துறந்து
சுதந்திர சொர்க்கம் சேர்ந்தபின்போ
போற்றப்படுவான் ! புகழப்படுவான் !
மதிக்கப்படுவான் !

□

கவிஞன், வாழும்போது, இம்மக்களின் !
ஓர் புன்முறுவலுக்கு ஏங்கித் தவித்தான் !
அவன் உள்ளுணர்வே, தன் அழகுப்
பொன் மொழிகளால் உலகை அலங்கரித்தன !
இருப்பினும் கவிஞனின் அறிவு ஒளிகளை
பாமரமக்கள் மறுத்து ஒதுக்கினாரே !
எவ்வளவு காலம் மக்களினம்
ஆழ்ந்த தூக்கத்தில் அமிழ்ந்திருக்கும் ?
சூழ்நிலையால், சந்தர்ப்பத்தால்,
பெரியவர்களாகி நடிப்பவரின்,
புகழ் பண்ணை எவ்வளவு காலம்
பாடிப்பாடி போற்றிக்கொண்டிருப்பார் ?
மக்களின் முற்போக்குக்குக்காரணமான
இக்கவிஞரின் உள்ளுணர்வுகளை,
அதன் அழகை, அன்பை, அமைதியை
எவ்வளவு காலம் உதாசீனம் செய்யமுடியும் ?

□

மக்களினம் மாண்டோரின் பெருமை பேசியே,
வாழ்வோரின் மதிப்பை எவ்வளவு காலம்
மறந்திருக்கும் ? மறுத்துக்கொண்டிருக்கும் ?
துன்பத்தால் குழப்பட்ட வாழ்க்கையிலே,
அறிவற்றவன் வழியிலே, ஒளி உண்டாக்க,
தன் வாழ் நாளெல்லாம் மெழுகுவத்தியாய் எரிந்து,

அவர்களின் அறிவு வழியிலே
    ஒளி உண்டாக்கிய கவிஞனே !
நீயே வாழ்க்கையின் உயிர்
    நீயே கடுமையான காலத்தை வென்றவன் !

□

ஓ கவிஞனே ! நீ என்றாவது ஒரு நாள்,
    உலக மக்களின் இதயங்களை ஆட்சிசெய்வாய் !
உன் பேரரசிற்கு என்றும் அழிவேயில்லை !

□

ஓ கவிஞனே ! உன் முன்னால் ஆன
    மணி மகுடத்தை உற்று நோக்கு !
புகழ் பூக்களால் புனையப்பட்ட,
    அழகான மாலை அதிலே மறைந்திருப்பதைப்பார் !

□

□ □ □

# 15. ஆத்மாவின் பண்

Song of the Soul

என் ஆத்மாவின் ஆழத்தே ஓர் வார்த்தையற்ற
பாடல் பூக்கின்றது!
அந்தப் பண் என் இதயவிளைநிலை மறைந்துள்ளது!
அது காகிதத்தின் மேல், மையுடன்
கரைந்து வாழ மறுக்கின்றதே!
மெல்லிய போர்வைக்குள் என் அன்பை
அருந்தி வழிகின்றதே அன்றி;
என் துடிக்கும் உதடுகளில் அல்ல!

□

நான் எப்படி அதை வெளியிடுவேன்?
அது பாருலக ஆவியுடன் கலந்து விடுமோ?
அஞ்சுகின்றேன் நான்!
கடுமையான காதுகளுக்கு பயப்படுகிறதே!
என் இதய வீட்டிலேயே வசிக்கின்றதே!
நான் யாரிடம் அதைப்பாடுவேன்?

□

நான் கண்ணின் கருமணியால்
காண்கின்றேன்! அந்தோ
அந்த நிழலின் நிழல் தானே தெரிகிறது!
என் விரல் நுனிகளால் தொட்டால்
அதன் துடிதுடிப்பையன்றோ உணர்கிறேன்!

□

பரந்த ஏரியிலே பிரதிபலிக்கும்
அந்த மின்னும் உடுக்கள் போல்,
என் கைகளின் செயல்கள் அந்நன்
தோற்றத்தை உணர்கின்றன!
அந்தப் பளிச்சிடும் பனித்துளி
கருகி உதிரும் மலர்களின் மர்மத்தை
விளக்கி வெளிப்படுத்துவதுபோல்,
என் கண்ணீர் துளிகள் என்
இதய கீதத்தை இசைக்கின்றதே!

□

இந்தப் பாடல்
ஆழ்ந்த சிந்தனையால் உருப்பெற்ற பாடல்,
பேசாமையால் வெளியிடப் பட்ட பாடல்,
பேரிரைச்சலால் அடக்கப்பட்ட பாடல்,
உண்மையால் மடக்கப்பட்ட, பாடல்,
கனவுகளால் திரும்பக் கூறப்பட்ட பாடல்
காதலால் அறிந்துணரபட்ட பாடல்,
விழிப்புணர்வால் மறைக்கப்பட்ட பாடல்,
உள்ளுணர்வால் பண்பாடப் பட்ட பாடல்.
ஆம் அதுதான் ஆத்மா பாடிய பாடல்
இதுவே காதல் கவிதை! இதை
கெயினும் ஈசுவும் பாடமுடியுமா ?
இது மல்லிகையை விட மணங்கமழ்வது,
இதை எந்தக்குரலால் அடிமை
கொள்ள இயலும்?

□

இது கன்னிப் பெண்ணின் இரகசியம்போல்
இதயமெல்லாம் நிறைந்து சூழ்ந்தது !
இதை எந்த வீணைநரம்புகளால் மீட்டமுடியும்?

யாரால் பரந்த கடலின் பிளிரலையும்
கூவும் குயிலின் கீதத்தையும் இணைக்க இயலும்?
யாரால் பாயும் புயலின் சிற்றத்தையும்
இளங்குழவியின் தேம்பலையும் ஒப்புமை
ஆக்கிக் கூற முடியும்?
யாரால் இதயம் இசைக்க வேண்டிய சொற்களை
தொண்டைகிழியக் கூவமுடியும்?
யாரால் கடவுளின் பாட்டை, நாவால்
பாட முடியும்? யார் துணிவார்?



# 16. கண்ணீரும் புன்னகையும்

Tears and Laughter

ஆதவன் தன் ஒளிக்கதிர்களை அடக்கிக் கொண்டு, பூங்காவிலின்று விடைபெற்றபின், வெண்மதி தன் குளிர் நிலவை, மலர்களின் மேல் தூவலாயிற்று. நான் மரத்தடியிலே அமர்ந்து அவனியின் வாயு மண்டல அதிசயத்தை எண்ணி எண்ணி வியந்து, மரக்கிளைகளிடையே பரந்து விரிந்த ஆகாயத்தில் மினுமினுக்கும் வெள்ளித்தூள்களென விளங்கிய உடுக்களை நோக்கலானேன். சலசல வென்று சமவெளியை நோக்கி, இன்பப்பண் இசைத்து, வேகமாக விரைந்து செல்லும் காட்டாற்றின் பேரிரைச்சல் வெகு தூரத்திற்கு அப்பாலிருந்து வந்து என் காதுகளில் வீழ்ந்தது.

பாடும் பறவைகள் கிளைக் கூண்டிலே அமைதியாக அடங்க, மலர்கள் மணங்கமழும் இதழ் குவிக்க, ஒரு பொறுக்க முடியாத அமைதி ஆட்சி செய்ய, யாரோ புற்களின் மேல் நடக்கும் காலடி யோசையைக் கேட்கலானேன். கூர்ந்து நோக்க இரு இளங்காதலர்கள் வருவதைக் கண்டேன். அவர்களை நான் நன்கு காணும் படியும், அவர்களுக்கு என் உருவம் பார்க்க இயலாதபடியுமான ஒரு மரத்தடியில் அமர்ந்தனர், சுற்றும் முற்றும் பார்த்தபின் அவ் இளைஞன் கூறினான்.

''என் அன்பின் அன்பே! அருகே அமர்ந்து என் இதயத்தின் சொற்களைக்கேள்! எங்கே சிரிபார்க்கலாம்? உன் இன்பமே என் வருங்காலத்தின் விளக்கம்! இன்பமாயிரு! வரப்போகும் நாட்கள் நம்முடன் கூடிக்களிப்படைகின்றன. என் உள்ளம், உன் அகத்தே வாழும் சந்தேகத்தைப்பற்றி எச்சரிக்கின்றது; ஏனெனில் சந்தேகம் காதலின்களங்கமாகும்.

விரைவில் நீ, அழகான வெண்ணிலவால் ஒளிரும் இப் பேரரசை அரசோச்சப் போகின்றாய் ! சீக்கிரமே நீ என் அழகிய அரண்மனையின் அரசியாக விளங்க, அங்குள்ள பணிப் பெண்களும், அடிமைகளும் உன் நாவசைவிற்குக் கை கட்டி, வாய் பொத்தி நிற்பர்,

என் அப்பாவின் தங்கக் களஞ்சியத்திலே சிரிக்கும் பொற் காசுகள் போல சிரி பார்க்கலாம். என் இதயத்தே மறைந் துள்ள இரகசியங்களை உன்னிடம் மறைத்து வைக்க விரும்ப வில்லை. நாம் ஓராண்டுகாலம் ஆனந்தமாகப் பயணம் செய்து தந்தையின் செல்வத்தையெல்லாம், சுஜர்லந்தின் அழகிய ஏரிக்கரையிலும், இத்தாலியின் மணி மண்டபங் களிலும், எகிப்தின் பிரமிட்டுகளிலும், லெபனானின் புன்னை மரத்தடியிலும் கூடிக்களித்து, வாரி இறைப்போம் ! நீ பல நாட்டு இளவரசிகளையும் சந்திக்கும்போது அவர்கள் உன் அழகு, ஆபரணம், உடை, நடை அனைத்தையும் கண்டு பொறாமை கொள்ளுவார்கள். நான் இவை அனைத் தையும் உனக்களிப்பேன். அன்பே ! உனக்குத் திருப்தி தானே ?''

இருவரும் எழுந்தனர்.

சிறிது நேரத்தில் அவர்களிருவரும், பணக்காரன் ஏழை களின் இதயத்தை மிதிப்பது போல் மலர்களை மிதித்து நடந்து சென்றனர். அவர்கள் மறைந்த பின் பணத்திற்கும் காதலுக்கும் ஒப்புமை நோக்கலாயிற்று என் உள்ளம்.

பணம்! உண்மையற்ற அன்பின் உற்பத்தி; பொய்யான ஒளியின் உதயம்: நஞ்சான தண்ணீர் கிணறு; தள்ளாத வய தின் பேராசை; இதுவே பணம்!

நான் சிந்தனைப் பாலையிலே திரிந்து கொண்டிருந்த போது, தனிமையான, ஒரு இணையான இருவர் என்னைக் கடந்து சென்று புல்மேல் அமர்ந்தனர்.

வயல் வெளியிலே உடல் உருக்குலைய உழைத்த அந்த இளைஞனும் மங்கையும் குளிர்ந்த நிழலிலே நெருங்கி அமர்ந் தனர்!

சிறிது நேரம் அமைதி நிலவியபின் பருவக் காலத்தால் உலர்ந்த அவ்வாலிபனின் உதடுகள் விரிந்தன.

''அன்பே! கண்ணீர் சிந்தாதே. நம் கண்களைத் திறந்து இதயத்தை அடிமை கொள்ளும் காதல் நமக்குப் பொறுமையளிக்கும். நம் தாமதத்தால் உள்ளத்தைத் தேற்றிக் கொள். நாம் சபதம் செய்த பின்பே இக்காதல் கோயில் உள்ளே புகலானோம். நம் காதல் வறுமையிலே தான் வளர்ச்சியடையும். நாம் காதலின் பெயர் கூறியே ஏழ்மைத்தடையால்வருந்தி, துன்பமுனைகளால் குத்தப்பட்டு பிரிவின் வெறுமையால் வாட்டப் படுவதைப் பொறுத்துக் கொண்டுள்ளோம். நான் இத்தடைச் சக்திகளுடன் போரிட்டு, நம் வாழ்வின் பயணத்தை முழுமையாக்கும் பல மான சக்தியை உன் கைகளிலே பெற்று, வெற்றி வந்தடையும் வரை போரிட்டு வாழ்வேன்.

காதல்-காதல் சக்தி-அதன் பலி பீடத்திலே நாம் சிந்திய கண்ணீரையும், கதறலையும், எரியவிட்ட கற்பூரத்தையும் அறிந்து நமக்கு வெகுமதி அளிக்கப்படும். அன்பின் அன்பே! விடை பெற்றுக் கொள்கின்றேன். இந்த உள்ளத்தை உருக் கும் வெண்ணிலா மறைவதற்கு முன்னே நான் உன்னை விட்டுப் பிரிய வேண்டும்'' என்றான்.

கொதிக்கும் காதலும், கசக்கும் ஏக்கமும், தித்திக்கும் திடமான பொறுமையும் கலந்த தூய்மையான குரலால் ''அன்பரே! போய் வெற்றியுடன் திரும்ப விரைவில் வாருங் கள். வணக்கம்!'' என்றாள் அப்பெண்.

நான் அயர்ந்து தூங்கும் இயற்கையை நோக்க, ஆழ்ந்த சிந்தனையால் பரந்த, ஆதியந்தமற்ற, எந்த சக்தியும் தட்

டிக் கேட்காத, செல்வாக்கால் கொள்ளை கொள்ளப்படாத, பணத்தால் வாங்கப்படாத அந்தக் காதலின் உண்மையைக் கண்டறியலானேன்.

காலத்தின் கண்ணீரால் கரைந்து படாமல், துன்பத்தால் இறந்து படாமல், வாழும் இக்காதலை சுஜர்லந்தின் நீலநிற நீர் நேக்கத்திலோ, இத்தாலியின் அழகிய சிற்ப மண்டபங் களிலோ காணவே முடியாது!

பொறுமையால் பலமடைந்து, தடையையும் தாண்டி வளர்ந்து, மாரிக் காலத்தே வெப்பமடைந்து, வசந்தத்திலே செழித்து வளர்ந்தோங்கி, கோடையிலே தென்றலாகி வீசி, இளவேனிலில் கனிந்து குலுங்கி நகைக்கும் காதலைக் கண்டேன்.



# 17. பூவோ பூ!

● ● **Song of the flower**

□

இயற்கைக் குரல் கூறும், உச்சரிக்கும்
அன்பு மொழி நான் அல்லவோ ?
நீலநிற ஆகாய கூடாரத்தினின்று
பச்சைக் கம்பளமாய் வயல் வெளியே
வீழ்ந்த மின்னும் நட்சத்திரம் நான் அல்லவோ ?
மாரிக் காலப் பெண்ணுடன் இணைந்து கருவுற,
வசந்த மங்கை ஈன்றெடுத்த அன்பு மகள்,
இயற்கைப் பொருள்களின் புதல்வி நானல்லவோ !
கோடையின் மடியிலே தவழ்ந்து வளர்ந்து,
இளவேனில் மெத்தையிலே கண்ணயர்வேன் !

□

மலரும் காலையில் தென்றலுடன் கூடிடுவேன் !
புலரும் ஒளிவெள்ளத்திற்கு முரசடிப்பேன் !
அந்தி சாயும் வேளையிலே பறவையுடன்
கூடி ஒளிக்கு அன்பு விடை அளிப்பேன் நான் !

□

பரந்த வெளியெல்லாம் என் வண்ணத்தால்
அழகு கொஞ்ச, வீசும் காற்றெல்லாம்
என் நறுமணத்தால் கமழலாயிற்றே !

□

நான் தூக்கத்தை அணைத்து அமைதியுற,
இரவு என்னைக் கண்காணிக்கும்!
நான் காலையில் எழுந்தவுடன் கதிரவனை
வெறித்துப் பார்ப்பேன்! சூரியன் தானே
பகலின் ஒரே ஒரு கண்ணாய் ஒளிர்கின்றான் !

□

நான் பனி நீரை மதுவாய் குடிப்பேன் !
பறவைகளின் பண்ணுடன் பாடிடுவேன் !
பயிர்களின் அசைவுக் கேற்ப நான்
தாளமிட்டு நடனமாடிடுவேன் !

□

நான் காதலர்களின் அன்புப் பரிசு !
மணமக்களின் மங்கல மாலை!
இன்பத்தின் வாழ்கின்ற நினைவு !
இறந்தவர்கள் இனி இறப்பவர்கள்
அளித்திடும் கடைசி பரிசு !
நானே இன்பத்தின் பெரும் பங்கு !
துன்பத்தின் இருப்பிடமும் நானே !

□

நான் பேரொளியைக் காணத்தான்,
விண்ணை அண்ணார்ந்து நோக்குவேன்;
நான் என் நிழல் காண என்றுமே
தலை தாழ்த்திக்குனிவதே இல்லை !

□

மானிடனே ! நான் புகட்டும் அறிவு இதோ,
"எப்போதும் தலை நிமிர்ந்து நில் நீ !
தலை தாழ்த்தி என்றுமே கீழ் நோக்காதே !"

□

# 18. கனவுத் தோற்றம்

● ● **The Vision**

வயல்வெளி மத்தியில், தெளிந்த நீரோடைக்கரையில், கைதேர்ந்த வலைஞனால் செய்யப்பட்ட கூண்டு ஒன்றைக் கண்டேன். கூண்டின் ஒருமூலையில் இறந்துபோன பறவையொன்றும், மற்றொரு மூலையில் நீரற்றகிண்ணமும், தானியமற்ற தகரடப்பாவும் இருக்கக் கண்டேன்.

சல சலக்கும் நீரோட்டமும், இறந்த பறவையும், சூழ்ந்த அமைதிக்கும் மதிப்பிற்கும் அருகதையுள்ளதென—இதயத்தாலும், உள்ளுணர்வாலும் சிந்திப்பதற்குத் தகுதியானதென அடக்க, ஒடுக்கமாக, நின்று கொண்டிருந்தேன்.

எண்ணங்களாலும், சிந்தனைகளாலும் குழப்பமடைய, அந்த வருத்தத்திற்குரிய பறவை, தெளிந்த நீரோடை பக்கத்திலே தாகத்திலும், வளமான வயல் வெளியிலே பசியாலும் வாழ்கைத் தொட்டிலிலே செத்து மடிந்ததென உணர்ந்தேன். இச் செயல் ஒரு பணக்காரன், பெரிய இரும்புப் பெட்டியிலே அடைக்கப்பட்டு, குவிந்திருக்கும் பொற்காசுப் புதையலிலே பசியால் செத்து மடிந்ததை நினைவூட்டியது.

என் கண் முன்னே அந்தக் கூண்டு, ஒரு மனித எலும்புக் கூடாக மாற, அந்த இறந்த பறவை மனிதனின்-துயரம் தோய்ந்த பெண்ணின் இதழ்கள் போல்-ஆழ்ந்த புண்ணிலிருந்து பீறிட்டு வரும் இரத்தம் தோய்ந்த இதயமாக்கிக் காட்சி அளித்தது.

அப்புண்ணிலிருந்து ஒருகுரல் கூவலாயிற்று, ''நான் தான் பொருளின் கைதியாய், சட்டத்தின் குற்றவாளியாய் விளங்கும் மனிதனின் இதயம்.

இயற்கையின் அழகு வெளியிலே, வாழ்க்கை நீரோடைக் கரையிலே, மனிதனால் செய்யப்பட்ட சட்டக்கூண்டிலே கைதியாக்கப்பட்டேன்.

அழகுத் தோற்றத்தின் மத்தியிலே, நான் இயற்கையின் கொழிக்கும் எழிலையெல்லாம் சுதந்திரமாய் அனுபவிக்கத் தடுக்கப் பட்டதால் கவனிப்பாரற்று இறந்து பட்டேன்.

தன் உள்ளத்தே காதலையும் ஆசையையும் தட்டி யெழுப்பும் ஒவ்வொரு அழகான பொருளும் வெட்கக் கேடானது என்பது மனிதனின் எண்ணம். தான் அடையத் துடிக்கும் நல்ல பொருளெல்லாம், பயனற்றதென்பது மனிதனின் தீர்ப்பு.

நான் மனிதனின் துர்நாற்றக் கட்டளைக் குகையிலே அடைக்கப்பட்ட, உலக அதிகாரச் சங்கிலிகளால் பிணைக் கப்பட்ட, கட்டப்பட்ட நாவையும், கண்ணீர் உலர்ந்த குழி விழுந்த கண்களையும் உடைய, சிரிக்கும் மக்களினத் தால் மறக்கப்பட்ட, இழந்த இதயமானேன், என்று புண்பட்ட இதயத்திலிருந்து பெருகியோடும் இரத்தத்துடன் கலந்து வரும் கதறிய குரலொலியைக் கேட்டேன்.

இன்னும் பலப்பலவும் சொல்லப் பட்டதானாலும் என் துக்கம் தோய்ந்த கண்களும், தேம்பி அழும் இதயமும், என் பார்க்கும் சக்தியையும் கேட்கும் ஆற்றலையும் தடுத்து மறைத்துவிட்டன;

○ ○ ○

# 19. வெற்றி வீரர்கள்

**The Victors**

ஏரிக்கரையிலே, புங்கமர நிழலிலே, ஒரு உழவனின் மகன், தண்ணீரின் அமைதியையும் மௌனத்தையும் பார்த்து எண்ண வெளியிலே மிதந்து கொண்டிருந்தான்.

அவ்வாலிபன், காதல் கதை பேசும் இயற்கையின் மடியிலே— அணைக்கும் கிளைகளும், உணர்வைத் தூண்டும் மலர்களும், மெல்ல அசையும் பயிர்களும், அழைக்கும் அன்பும் பறவைகளும் நிறைந்த இயற்கை வனத்திலே-வளர்ந்தவன்.

பலபணிப் பெண்கள் புடை சூழ அவ்ஏரிக்கரையின் ஓரத்திலே அமர்ந்திருந்த ஆரணங்கைக் கண்டதும் காதல் கொண்டான்.

பிறகு அவன், சக்கரவர்த்தியின் செல்வப்புதல்வி யென்றறிந்ததும் தன் திறந்த இதயத்தையே கடிந்து கொண்டான். ஆனால், கண்டனம்- தன் காரியத்திலே செல்லும் இதயத்தைத் திருப்பிவிட முடியுமா? இல்லை.. தனிமை, உண்மையிலிருந்து உள்ளத்தைத் தாழ்த்திவிட முடியுமா? இந்த இதயத்திற்கும் உள்ளுணர்விற்கும் இடைப்பட்ட மனிதன் வடகிழக்கு, தென்மேற்கு, பருவக் காற்றிற்கு இடைப்பட்ட தளிர்க்கொடி போன்றவனல்லவோ!

அவன் தன் பஞ்சடைந்த கண்களால் மேன்மையான மல்லிகைக்குப் பக்கத்திலே, வளரும் எருக்கம் பூவையும், புன்னை மரத்திலே குயிலுக்கு அருகே காக்கையையும்

கண்டான், இருப்பினும் உயர்ந்த மரத்தின், வேர் பக்கதிலே வளரும் அருகம்புல், அதை இரம்பமென அறுப்பதாக அவன், துடிக்கும் உள்ளம் வற்புறுத்திக் கூறியது.

வேதனையால் விம்மி அழுதான். நேரம் பறந்து சென்றது. அன்பும் இன்பமும் எக்களிக்க உள்ளம் விம்மிக் கூறலாயிற்று.

''காதல் எள்ளிநகைக்க, நம்பிக்கை பரிதாபமாகமாற, விருப்பம் வெட்கக் கேடாகமாறுவதைத்தான் பார்க்கின்றேன் நான்.

நான் போற்றும் காதல் என் இதயத்தை மன்னர் மன்னனின் மாளிகைக்கு உயர்த்தி, ஏழை உழவனின் மண் குடிசைக்குக் குப்புறத்தள்ளி விடுகிறது.

இக்காதல், புகழ்வோரால் சூழப்பட்டு, அடிமைகளால் ஆராதிக்கப்பட்டு, மூதாதைகளின் மூல பலத்தால் பாதுகாக்கப்படும் அழகிய இளவரசியை என் உள்ளத்திற்குள் இடமாகப் புகுத்தியது. காதலே! நான் உன்னைத் தொடர்ந்து வருகின்றேன்.

நீ என்னிடம் என்ன எதிர்பார்க்கின்றாய்? பற்றி எரியும் பாதையிலே உன் உடன் நடந்தேன். ஆனால் கண்களைத் திறந்த போது இருளைத்தவிர வேறு கண்டிலேன். என் உதடுகள் துடிக்க, அது சோகக்கதைகளைக் கூறவே அனுமதித்தாய், காதலே! நீ உன் இன்பத் தோற்றத்தால் என் இதயத்தைப் பசிக்க வைக்கின்றாய். ஏனெனில் நான் வலிமை அற்றவன்; நீயோ பலவான். நீ ஏன் என்னிடம் துன்பப்போர்துவக்குகின்றாய்? நான் நிரபராதி; நீயோ நீதிமான். நீ ஏன் என்னை நசுக்குகின்றாய்?

நீயே என் உருவம்; நீ ஏன் என்னை காயப்படுத்துகின்றாய்? நீயே என் பலம்; என்னை ஏன் சக்தியற்றவனாக்குகின்றாய்? நீயே என் வழிகாட்டி; என்னை ஏன் பாலையிலே பரிதவிக்க விடுகின்றாய்?

நான் உன் கருணையின் காலடியிலே வீழ்ந்துள்ளேன். உன் வழியிலே நடப்பேன். உன் திடஉள்ளமும், உன் தாழ்மையும் என் இதயத்தை இன்பமாக்கும்.

கடல் காதலனை கட்டி அணைக்க விரைந்தோடும் அருவி, இன்பக் கதிரவனைக் கண்டு சிரிக்கும் முல்லை, சம வெளித் துணைவனை நெருங்கும் கார்முகில். நானோ அருவி கேட்காத, முல்லை பார்க்காத, கார்முகிலுக்குத் தெரியாத மனிதனாகி விட்டேன்.

நான் என் காதலிலே தனியன். ஏன் எனில், அவள் என்னை, அவள் தகப்பனின் பாதுகாப்புப் படையிலே ஒரு வீரனாகக் கூட சேர்த்துக்கொள்ளமாட்டாள். ஏன்? நான் ஒருவன் உலகில் வாழ்வதே அவளுக்குத் தெரியாதே! என்று என் உள்ளம் விம்மி வடிந்தது.

அவன் கொஞ்ச நேரம் அமைதியானான் சலசலக்கும் நீரோடையின் மொழியை அறிய, மலர்களின் அசைவை அளக்க விரும்புவது போல இருந்தது. அந்தக் கணநேர அமைதிக்குப் பிறகு ''நீ! உன் பெயரைக் கூப்பிட பயப்படும் நான். நீயோ புகழின் நிலவிலே, பெருந்தன்மை மதில்களால் சூழப்பட்டு, இரும்புக் கதவுகளால் மூடப்பட்டு, விலக்கப் பட்டு மறைக்கப்படுவாய். நாம் மரணத்திலன்றி, வேறு எங்கே சந்திக்க முடியும்?

அங்கன்றோ சமத்துவம் ஆட்சி புரியும்; நம் வாழ்க்கை விளக்கப்படும். நீ! காதல் ஆசி கூறிய என் இதயத்தைக் கவர்ந்து, இயற்கை போற்றிய உள்ளுணர்வை அடிமை கொண்டாய்! இது நாள் வரை நான் சுதந்திரமாய் பறவை போல் வயல் வெளியெல்லாம் பறந்து வாழ்ந்தேன். ஆனால் இன்று நான் பறந்து சென்ற இதயத்தின் கூண்டுக் கைதியாய் விட்டேன்.

என் பேரழகே! நான் உன்னைக் கண்டவுடன் உலகில் உயிரெடுத்ததன் உண்மை நோக்கை உணரலானேன்.

நீ அரசிளங்குமரி என்று அறிந்த பின், நான் என் ஏழ்மையைப் பார்த்தேன். இயற்கை மனதனறியாத ஒரு இரகசியத்தை வைத்திருப்பதை உணர்ந்தேன். அந்த இரகசிய வழி காதல்-மன்னுலகின் கட்டு திட்டங்களைக் கடக்கும் இன்ப இடத்திற்கு, இதயத்தை இழுத்துச் செல்லும் என்பதை அறிந்தேன்.

நான் உன் கண்களைக் கண்டவுடன் இந்த வழி-மனித மனக் கதவுகள் அமைந்த சொர்க்கத்திற்குச் செல்லும் என்பதை நன்கு அறிந்தேன்.

நான் உன் வாழ்க்கை நிலையையும், என் ஏழ்மையையும் ஒப்பிட்டபோது, சிங்காரும் சித்திரக்குள்ளனும் போரிடுவது போல உணர்ந்தேன். இனி இவ்வுலகம் என் இன்ப வீடாகாது என்றும் தெரிந்தேன்.

நேற்று முல்லை சூழ்ந்த ரோஜா போல் கன்னிப் பெண்களால் சூழப்பட்ட உன்னைக் கண்டவுடன் என் கனவுக் காரிகை, வானிலிருந்து வழுக்கி வந்தது போல் நம்பினேன். ஆனால் உன் தந்தையின் பெருமையை அறிய, ரோஜாவைப் பறிக்கும்போது மறைந்திருந்த முள் குத்த, சிற்றலிலிருந்து இரத்தம் கொட்டும், கைகளாவதை அறிந்தேன். ஆனால் இன்று காலம் கடந்து விட்டது. என் கனவுக் காரிகை, விழிப்பு வந்தால் பறந்து மறைந்து விடுவாள்!''

அந்த வாலிபன் எழுந்து துயரம் தோய அசைந்தாடி அருவியைச் சேர்ந்தான். தன் முகத்தைக் கைகளிலே மறைத்து ஆழ்த்தி ''ஓ மரணமே! என்னை அழைத்துச் செல் உலகின் கூறிய முட்களால் குத்தி என்னை வாட்டுவது நீதியல்ல. இந்த வேற்றுமை நிறைந்த, காதலின் பெருமையை வெட்டி வீழ்த்தி, அவ்வரியாசனத்தில் வெற்று மதிப்பை முடிசூட்டும் இவ்வுலகிலிருந்து என்னை விடுவித்துச் செல்! சாவே

எனக்கு உதவி செய்! முடிவு ஒன்றே என் ஒரே வாழ்விடம். அங்கு என் காதலிக்காக காத்துக் கொண்டிருப்பேன்,'' என்று நம்பிக்கையற்று கெஞ்சி அழுதான்.

மாலை நெருங்க, கதிரவனும் தன் ஒளிக் கரங்களைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு வயல் வெளியிலிருந்து மறைந்தது. ஆனால் இவ்வாலிபனின் உள்ளமும் உடலும் அலைந்து கொண்டேயிருந்தன. பின் அந்த அரசிளங்குமரி அமர்ந்த இடத்தில் போய் உட்கார்ந்தான். தன் தலையை இதயம் வெடித்து விடாதிருக்கும்படி மார்பின் அருகே கவிழ்த்து அழுத்தினான்.

அந்த நேரத்தில், அழகான இளம் பெண் ஒருத்தி அப் புங்கமரத்திற்குப் பின்னாலிருந்து வெளிப்பட்டாள். அவளின் பட்டாடை புல் தரைமேல் படர்ந்து தவழ்ந்தது. அவள் அவனருகே வந்து தன் தளிர்க் கரங்களை அவன் தலைமேல் வைத்தாள்.

மாயையினின்று விடுபட்டு, தன் கண்களின் ஓவியத்தை நம்பாமல், அவளை வெறித்து நோக்கினான். அவள்தான் மன்னர் மன்னனின் மகள்!

ஒளிப்பிழம்பான புதரைக் கண்டவுடன் மண்டியிட்ட மோசஸ் போல வணங்கினான் வாலிபன். பேசுவதற்குப் போராடிய அவன் ஊமையாய், கண்ணீர் வடிய பேசா ஓவியமாய் காட்சி அளித்தான்.

இளவரசி அவனை ஆரத்தழுவி, செவ்விதழ்களால் அன்பு முத்தம் பதித்தாள். தன் கண்ணாடிக் கன்னத்தில் கண்ணீரைத் துடைத்தாள். பின் குழலினும் இனிய குரலால் ''அன்பரே! என் இன்பக்கனவிலே தோன்றிய உன் உருவம் என் தனிமையைத் துரத்தி விட்டது. நீயே என் இழந்த இதயத்தின் துணைவன். நான் இவ்வுலகில் உதித்தபோது என்னிலிருந்து கிழிக்கப்பட்ட மறு பாதியே நீ! நான் அரண்

மனையை அகன்று பறந்து வந்தேன். ஏன்? என்னைக் கண்டு பயப்படுகின்றாயா? நான் என் பெருமையுடைய பெற்றோரைத் துறந்து உன்னுடன் தூர தேசத்திற்குத் தொடர்ந்து வந்து, இல்லறம் இறப்பு இரண்டையும் குடிக்க துணிந்து வந்தேன். வா! நாம் மண்ணுலகிலிருந்து மறைந்து மாற்றுலகம் செல்வோம். காதலா! வா போகலாம்!'' என்றாள். அந்த அடர்ந்த மரங்களுக்கிடையே! இரவின் கருமையிலே கைகோர்த்து நடந்து மறைந்தனர் அக்காதலர் கள். சென்ற அவ்விருவரையும் சூழ்ந்து ஒளிப்பிழம்பொன்று மின்னிற்று. இப்போது அவர்கள் இருட்டிற்கு அஞ்சவோ மன்னன் தண்டனைக்கு பயப்படவோ இல்லை.

அந்த நாட்டின் கடைக்கோடியிலே இரு எலும்புக் கூடு களை மன்னனின் போர் வீரர்கள் கண்டெடுத்தனர். ஒன்றின் கழுத்திலே ஒரு பொற் பதக்கமும், அவர்களின் பக்கத்திலே ஒரு கல் வெட்டும் காணப்பட்டன.

அதில் ''மரணம் எடுத்தேகுவதை யாரும் திருப்பித் தர முடியாது; சொர்க்கம் ஆசியளிப்பதை யாரும் தண்டிக்க முடியாது. முடிவின்திட எண்ணத்தை யாரும் மாற்றவும் முடியாது'' என்றிருந்தது.

□ □ □

20 முதல் 31 வரை இதில் இல்லை. சேர்க்க வேண்டும்.



□

ஆ. மா. சகதிசன் என்கிற தமிழ்நாட்டு கலீல் கிப்ரான் தமிழ் இலக்கிய உலகின் மேதை டாக்டர் மு. வரத ராசனார் அவர்களின் பாராட்டைப் பெற்றவர், அவருடைய மாணவர். புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் கருத்துக்களை ஏற்று, அதன் வழி நடக்கிற தமிழ் இலக்கியவாதிகளில் முதன்மையானவர்.

□

தமிழில் இதுவரை எவருமே செய்யாத சாதனைகளுக்கு சொந்தக்காரர். லெபனான் நாட்டு தீர்க்கதரிசி கலீல் கிப்ரானை தமிழாய் முழுவதும் தருகிற இவருக்கு இவரின் எண்ணங்களுக்கு சூரியன் கம்பீரமான வாழ்த்து மாலைகளை அணிவிக்கிறது.

சூரியன்

---

ஏ. கே. வேலன் அன் சன்ஸ் அச்சகம், சென்னை-600 093